## இக்கைகள் வேகமாக வேலை செய்கின்றன, ஆனால்...

## ...வேகமாக வேலை செய்யும் கைகளும் அழுக்கடைகின்றன!




அழுக்கடைந்த கைகள்

**மறைந்திருக்கும்**
**அபாயத்தைத்**

தாங்குகின்றன!

அழுக்கில் கண்களுக்கு
புலப்படாத கிருமிகள் இருப்பதால்!

லைப்பாயினால் அடிக்கடி கழுவுங்கள்

# லைப்பாய் சோப்

அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களை காப்பாற்றுகிறது!

L. 184-50 TM

ஜூலை 21உ முதல்
தமிழ்நாட்டின் முக்கிய நகரங்களில்



ஸ்ரீ சுகுமாரின்

# மோகன சுந்தரம்

ஜே. ஆர். ரங்கராஜுவின்
துப்பறியும் நவீனம்




MADRAS-14-

டைரக்ஷன்
A.T. கிருஷ்ணசாமி, B.A.,

எம். எஸ். பிக்சர்ஸ்
வெளியீடு

# ஈயைக் கொல்லுங்கள்

## — அவை டைபாய்ட், வயிற்றுக் கடுப்பு, காலரா, வயிற்றுப் போக்கு, க்ஷயம், ஆந்த்ராக்ஸ் முதலிய நோய்க் கிருமிகளை எடுத்துச் செல்லுகின்றன

ஈ ஒரு தடவைக்கு 120 முட்டைகள் இடுகின்றன. ஒரே ஜோடி ஈக்களிலிருந்து சில வாரங்களுக்குள் லட்சக்கணக்கான சந்ததிகள் ஏற்பட்டுவிடக்கூடும்.

முட்டை நிலையிலிருந்தே ஈ எருக்குழி, அழுகிய உணவுப் பதார்த்தங்கள், குப்பைகளங்கள் இவற்றிலேயே வாழ்கிறது. அதனுடம்பிலுள்ள சிறுசிறு ரோமங்கள் வழியாக இந்த அசுத்தங்களைப் போகுமிடமெல்லாம் ஏற்றிச்செல்கிறது. ஒரே ஈயில் 60,00,000க்கு மதிகமான ரோகக்கிருமிகள் காணப்பட்டுள்ளன!

ஞாபகமிருக்கட்டும்: ப்ளிட்டிலிருக்கும் 5 கொடிய கீடநாசினிகள், ஈக்களையும் மற்ற எல்லாப் பூச்சிகளையும் துரிதமாகவும் நிச்சயமாகவும் கொல்லுகின்றன.

ஈ உங்களிடையே நோயைப் பரப்புமுன் அதைக்கொல்லுங்கள்!





# Doric

## டோரிக்

சிறந்த பிரயோசனமுள்ள

## பேனாக்கள்

ரெகுலர் ரூ. 6-



லீவர் - பில்லர்

ரூ. 6/8



1. இந்த அளவிலேயே உள்ள மற்றபேனாக்களைவிட அதிக மான மசியை கொள்கிறது.
2. மசிகசிந்து ஒழுகாமலிருக்கு மாறு உத்தரவாத முள்ளது.
3. தங்கமுலாம் பூசிய இரிடியம் தோய்த்த உறுதியான நிப்.
4. அநேகவித கவர்ச்சிகர அழகிய கலர்களில் உள்ளன
5. இது ஒரு டோரிக் தயாரிப்பு

டோரிக் பேனா சரியாக எழுதாவிட்டால் எங்களுக்குத் திருப்பி அனுப்புங்கள். இலவசமாக நாங்கள் பதில் பேனா அனுப்புவோம்.

எல்லா டீலர்களிடமும்
கிடைக்கும் அல்லது

**டோரிக் ப்ராடக்ட்ஸ்**

பம்பாய்: பம்பாய் மியூச்சுவல் பில்டிங், ஹார்ன்பி ரோடு — பம்பாய்.
கல்கத்தா: 10, சௌரிங்கி.
பெங்களூர்: 2, சவுத் பரேட்.



# பதினோராவது அகில இந்திய காதி, சுதேசி கைத்தொழில் பொருட்காட்சி

(சேலம் நகர சபையால் நடத்தப்படுவது)

## இசை, நடன, நாடக நிகழ்ச்சிகள்

*தினசரி மாலை 6-30 மணிக்கு*

*சங்கீத மண்டபத் திறப்பாளர் :* சினிமா புகழ் சித்தூர் ஸ்ரீ வி. நாகையா அவர்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| 5-8-51 | ஞாயிறு | ஸ்ரீமதி பிரேமா | — | பாட்டு |
| 6-8-51 | திங்கள் | சென்னை, சினிமா புகழ் குமாரி ஆர். தங்கமணி | — | நடனம் |
| 7-8-51 | செவ்வாய் | ரேடியோ புகழ் மாஸ்டர் ஆர். உதயசங்கர் & பார்ட்டி | — | பாட்டு |
| இரவு 9 மணிக்கு | | சேலம் முனிசிபல் உத்யோகஸ்தர்கள் நாடக சங்கத்தார் | — | "உயிரோவியம்" (நாடகம்) |
| 8-8-51 | புதன் | ஸ்ரீமதிகள் லலிதா, பத்மினி, ராகினி & பார்ட்டி | — | நடனம் |
| 9-8-51<br>10-8-51 | வியாழன்<br>வெள்ளி | முத்தமிழ்க் கலா வித்வ ரத்ன டி. கே. எஸ். சகோதரர்கள் | — | "மனிதன்" (நாடகம்) |
| 11-8-51<br>12-8-51 | சனி<br>ஞாயிறு | முத்தமிழ்க் கலா வித்வ ரத்ன டி. கே. எஸ். சகோதரர்கள் | — | "ஔவையார்" (நாடகம்) |
| 13-8-51 | திங்கள் | முத்தமிழ்க் கலா வித்வ ரத்ன டி. கே. எஸ். சகோதரர்கள் | — | "முள்ளில் ரோஜா" (நாடகம்) |
| 14-8-51<br>15-8-51<br>16-8-51 | செவ்வாய்<br>புதன்<br>வியாழன் | முத்தமிழ்க் கலா வித்வ ரத்ன டி. கே. எஸ். சகோதரர்கள் | — | "இன்ஸ்பெக்டர்" (நாடகம்) |
| 17-8-51 | வெள்ளி | குமாரி கமலா (பொன்னாச்சி) | — | நடனம் |
| 18-8-51 | சனி | சென்னை இளங்கோ மன்றத்தார் (ஆசிரியர் ஸ்ரீ எஸ்.டி.சுந்தரம்) ஸ்ரீ கே. சாரங்கபாணி ஸ்ரீ டி. கே. சம்பங்கி, ஸ்ரீ எஸ். என். ராஜேந்திரன் ஸ்ரீமதி ஜி. சகுந்தலா, ரத்னமாலா | — | "மனிதனும் மிருகமும்" (நாடகம்) |
| 19-8-51 | ஞாயிறு | சினிமா புகழ் ஸ்ரீ எஸ். ஏ. நடராஜ், ஸ்ரீ. எம். என். நம்பியார், ஸ்ரீ டி. எஸ். துரைராஜ், ஸ்ரீமதி ஜி. சகுந்தலா, ரத்னமாலா | — | "கவியின் கனவு" (நாடகம்) |
| 20-8-51 | திங்கள் | ஸ்ரீமதி கே. பி. சுந்தராம்பாள் & பார்ட்டி | — | பாட்டு |
| 21-8-51 | செவ்வாய் | "வாழ்க்கை" புகழ் குமாரி வைஜயந்திமாலா & பார்ட்டி | — | நடனம் |
| 22-8-51<br>23-8-51 | புதன்<br>வியாழன் | சக்தி நாடக சபையார் | — | "விதி" (நாடகம்) |
| 24-8-51<br>25-8-51 | வெள்ளி<br>சனி | சக்தி நாடக சபையார் | — | "தோழன்" (நாடகம்) |
| 26-8-51 | ஞாயிறு | ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி & பார்ட்டி<br>*(சென்னை மராமத்திலாகா மந்திரி கனம் ஸ்ரீ எம். பக்தவத்சலம் அவர்கள் தலைமை வகிப்பார்கள்)* | — | பாட்டு |

*பொருட்காட்சி கமிட்டியார்*

---

# கோவிந்தன் கிப்ஸ் உபயோகிக்கிறான்—

அவன் பற்கள் வெண்மையாகவும் ஒழுங்காகவும் இருக்கின்றன.





கோவிந்தன் கிப்ஸ் டென்டிபிரிஸை விரும்புகிறான். அவன் சிறு வயதிலிருந்தே அதை உபயோகித்து வருகிறான்.



காலையிலும் மாலையிலும் எல்லா பற்களையும் கிப்ஸ் டென்டிபிரிஸினால் தேய்க்கிறான். மேலும்கீழுமாக —ஒரு பக்கமிருந்து மறுபக்கமாக அல்ல.



அவன் பற்கள் பிரகாசமாகவும் வெண்மையாகவும் ஒழுங்காகவும் இருக்கின்றன. அது கிப்ஸ் டென்டிபிரிஸினால்தான்!

## நீங்களும் கிப்ஸ் உபயோகிக்கிறீர்களா?

சாம்பல், கரி, இவைபோன்ற இதர கரகரப்பான பல்துலக்கும் வஸ்துக்கள் பற்களுக்கும் ஈறுகளுக்கும் ஹானி விளைவிக்கக்கூடும். நுரைபோல் மிருதுவான கிப்ஸ் டென்டிபிரிஸ் பற்களுக்கோ அல்லது ஈறுகளின் மிருதுவான பாகங்களுக்கோ ஒருபொழுதும் கெடுதல் செய்வதில்லை. கிப்ஸ் நீங்கள் எப்பொழுதும் ஒழுங்கான பற்களைப்பெற உதவுகிறது. வாய்க்கும் சுவாசத்திற்கும் புதுமணத்தை அளிக்கின்றது. மேலும் அதன் 3 கவர்ச்சிகரமான வர்ணங்களிலுள்ள டப்பிகளில் எதை தேர்ந்தெடுத்தாலும் உபயோகிக்க மிகவும் சௌகரியமாயிருக்கும்.




# கிப்ஸ்
## டென்டிபிரிஸ்

ஒழுங்கான முறையில் பற்களை
வெண்மையாக சுத்தம் செய்கிறது

விலையோ சொற்பம்—பலநாட்கள் நீடித்துவரும்

GD. 27-173 TM



**ஸ்ரீ எஸ். தக்ஷிணாமூர்த்தி செட்டியார்**

● சென்ற 26-6-51 அன்று தமது 72-வது வயதில் புதுச்சேரியில் காலமான ஸ்ரீ எஸ். தக்ஷிணாமூர்த்தி செட்டியார் (Dubash - Chevelier De L'Ordre L'Etoile Noire) அவர்களது மரணம் குறித்து மனம் உடைந்து அன்னாரது உறவினர்களும் நண்பர்களும் அனுப்பி வைத்த அநுதாபச் செய்திகளுக்கு, புதுச்சேரியில் காலஞ்சென்ற என். செல்வராஜுலு செட்டியார் அவர்களின் குடும்பத்தினர்கள் யாவரும் தங்களது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றனர்; ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட முறையில் தங்களது நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ள முடியாமைக்கு வருந்துகின்றனர்.

● கடல் கடந்த பிரதேசங்களில் கப்பல் வாணிபத்தை விரிவான முறையில் நன்கு வெற்றிகரமாக செய்து வரும் மதராஸ் மெஸர்ஸ். என். செல்வராஜுலு செட்டி அண்டு கம்பெனி (இந்தியா)வில் காலஞ்சென்ற ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி செட்டியார் அவர்கள் ஓர் பிரதம பங்காளர். மேலும் மேற்படி கம்பெனியைச் சார்ந்த இதே துறையில் வர்த்தகம் செய்துவரும் புதுச்சேரியிலுள்ள மெஸர்ஸ். என். செல்வராஜுலு செட்டி கம்பெனியின் பூரண உரிமையாளரும் ஆவர்.

● காலஞ்சென்ற செட்டியார் அவர்கள் தயாள சிந்தை படைத்த ஓர் உத்தமர்; புதுச்சேரியிலும் மற்றும் வெளியூர்களிலும் உள்ள பல அற நிலையங்களிலெல்லாம் ஊக்கத்தோடு பங்கெடுத்துக் கொண்டு அவைகளின் நலனுக்குப் பாடுபட்டார்.

● புதுச்சேரியில் 11 - 7 - 51 அன்று அன்னாரது இறுதிச் சடங்குகள் நடைபெற்றன.

# பொருள்  அடக்கம்

மலர் 10 இதழ் 51 | 1951 ஜூலை 22 | கர ௵ ஆடி 6உ





## அட்டைப்பட விளக்கம்

இந்த இதழ் அட்டையில் அழகிய பூஞ்சோலை திகழ்கிறது.

அந்தப் பூஞ்சோலையில் வண்ண மலர்கள் அழகாகப் பூத்துக் குலுங்குகின்றன.

அதோ, அங்கே ஒரு மரக்கிளையில் தாய்ப் பறவை அமர்ந்து தன் குஞ்சுகளுக்குப் பரிவுடன் உணவு ஊட்டுகிறது! அணிற் பிள்ளை, தன் குட்டிக் கால்களில் தவழ்ந்து விளையாடுகிறது.

மேலே......ஏதோ மலர்கள்போல் காண்கின்றனவே......அவை மலர்கள் அல்ல; வண்ணாத்திப் பூச்சிகள்தாம்.

வண்ணாத்திப் பூச்சிகள் அழகிய மலர்கள் போலவே இருக்கின்றனவே என்று மயங்குகிறோம் அல்லவா! இந்த மயக்கம் டபிள்யு. எச். டேவிஸ் என்ற ஆங்கிலக் கவிஞருக்கும் ஏற்பட்டது. அவர் ஒரு கவியில் கூறுகிறார்;—

"வண்ணாத்திப் பூச்சிகள் பூச்சிகளே அல்ல. அவை சிறகுகள் கொண்ட புஷ்பங்களே. ஆனால் அந்த வண்ணாத்திப் பூச்சிகளுக்குத் தாம் இப்படி மாறி விட்டோமே என்ற வருத்தம் உண்டு. மறுபடியும் தம் பூர்வ நிலையை அடைய வேண்டுமென்று மலர்களிடையிலும் இலைகளிடையிலும் வந்து உட்காருகின்றன.

"இந்த வண்ணாத்திப் பூச்சியின் நிலையில்தான் நானுமிருக்கிறேன். என் அறிவு எத்தனையோ புதுப் புது விஷயங்களில் சென்றாலும், மிகப் பழைய கருத்துக்களிலேயே என் மனம் இன்பம் நுகர்கின்றது!"

எவ்வளவு அரிய உண்மையை, வண்ணாத்திப் பூச்சியை உதாரணமாக வைத்துக் கொண்டு சொல்லி விட்டார்!

இன்று நவீன இலக்கியம் எவ்வளவோ வளர்ந்து விட்டது. எனினும், கம்பர் கவிதையும், வள்ளுவர் குறளும், காளிதாசன் நாடகமும்போல் மனதுக்கு இன்பம் தருவது ஒன்றில்லை. சங்கீத உலகில் எத்தனையோ புதுப புது ராகங்களும் மெட்டுக்களும் இன்று வந்து உலவுகின்றன. எனினும், பழமையான தோடி சங்கராபரண ராகங்களைப்போல் மனசுக்கு நிறைவு தருவது வேறில்லை.

இந்த அற்புத உண்மையை இந்த இதழ் அட்டையிலுள்ள வனக் காம் உள்ளங்கையில் எடுத்து வைத்துக் காட்டி உணர்த்துகிறது.

# புத்துயிர்!


1
பெங்களூர்
ஆஸ்பத்திரி
காங்கிரஸ்
"ஹா! ஹா!
இது பிழைக்கவே
பிழைக்காது!"
2
"நான் குணமடைந்து
விட்டேன்!"
பெங்களூர்
ஆஸ்பத்திரி
தேர்தல்
காங்கிரஸ்
! ! ! !



கல்கி

மலர் 10 | தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 51

# பொது ஜனம் பொல்லாதவர்

"வருக, ஐயா! வருக! அமருக! வீற்றிருக்க! யாரோ என்றல்லவா பார்த்தேன்? நீங்கள்தானே? சந்தோஷம்! ஆம், சந்தோஷந்தான்! இப்போது சந்தோஷப்படாமல் வேறு எப்போது சந்தோஷப்படுவது? பெங்களூர்ச் செய்திகளைக் கேட்டீர்கள் அல்லவா? காங்கிரஸைப் பற்றி என்னவெல்லாமோ பொறாமைக்காரர்கள் சொன்னார்களே? 'உயிர் மங்கி விட்டது!' 'இனிப் பிழைக்காது!' 'பிழைத்தாலும் உயிர் இருக்காது!' 'உயிர் இருந்தாலும் காரியத்துக்கு உதவாது!' என்றெல்லாம் வீணர்கள் வம்பு அளந்தார்களே! அவ்வளவும் பொய்யாயின பார்த்தீரா? காங்கிரஸ் 'ஜம்' என்று பிழைத்தெழுந்து உட்கார்ந்துவிட்டதே!

"ஆமாம், ஐயா, ஆமாம்! காங்கிரஸுக்குப் பிராயம் முதிர்ந்து கட்டுத் தளர்ந்து போயிருந்தது என்னமோ உண்மைதான்! யார் 'இல்லை' என்கிறார்கள்? கொஞ்சம் நோய்ப்பட்டிருந்ததும் உண்மைதான். முக்கியமாக, இரண்டு நோய்கள் வளர்ந்திருந்தன. ஒன்று ஒற்றுமைக் குறைவு; இரண்டாவது, தூய்மைக் குறைவு. ஆனால் பெங்களூர்க் காற்று என்ன சாமான்யப்பட்டதா? காந்தி மகாத்மா கூட உடல் பலம் குன்றியிருந்த போது பெங்களூர்க்குச் சென்று சுகம் பெறவில்லையா? அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியைப் பெங்களூரில் கூட்டத் தீர்மானித்த போதே நானும் முடிவு கட்டி விட்டேன்,—காங்கிரஸ் இந்தத் தடவை பிழைத்து விடும் என்று.

"நோய் நொடிகள் வருவது மனிதர்களுக்குச் சாதாரண விஷயம். மனிதர்கள் நடத்தும் ஸ்தாபனங்களுக்கும் நோய் வருவது இயற்கைதான். எந்த ஸ்தாபனந்தான் ஒற்றுமைக் குறைவு என்னும் நோய் பீடிக்காமலே வளர்ந்தது? நேற்றுத் தொடங்கிய பிரஜா கட்சியிலே பிரகாசத்துக்கும் ரங்காவுக்கும் சண்டை; வங்காளத்தில் கோஷுக்கும் ஜுகாந்தர் கட்சிக்கும் வேற்றுமை. பழைய பெரிய காங்கிரஸ் ஸ்தாபனத்தில் சில சமயம் ஒற்றுமைக் குறைவு ஏற்படுவது இயல்புதான்.

"ஆனால் தூய்மைக் குறைவு அப்படியன்று. அது மிகக் கொடிய நோய். தூய்மைக் குறைவு ஏற்பட்ட ஸ்தாபனத்தில் சீக்கிரமே புரையோடிவிடும். ஸ்தாபனம் பிழைப்பதே துர்லபமாகிவிடும். இதை உணர்ந்து பெங்களூரில் இரண்டு நோய்களுக்கும் நம் தலைவர்கள் சிகிச்சை செய்திருக்கிறார்கள். ஒற்றுமையை நிலைநாட்டவும் தூய்மையை வளர்க்கவும் உகந்த முடிவுகளைச் செய்திருக்கிறார்கள். 'காங்கிரஸுக்குள் கோஷ்டி உதவாது; காங்கிரஸ் இலட்சியங்களைப் பொதுப்படையாக ஒப்புக் கொள்வோர் அனைவருக்கும் நல்வரவு கூறவேண்டும்; போனவர்களும் திரும்பி வந்தால் சேர்த்துக் கொள்ளத் தயார்' என்று கூறி, காங்கிரஸின் கதவைத் திறந்து வைத்திருக்கிறார்கள்.

"அத்துடன், காங்கிரஸில் தூய்மைக் குறைவு வளராமல் தடுக்கவும் கண்டிப்பான ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஸ்தாபன ஊழலைப் பற்றி ஏதாவது புகார் வந்தால் உடனுக்குடன் சரியான முறையில் விசாரணை செய்யப்பட வேண்டும் என்று தீர்மானித்திருக்கிறார்கள். வேறு என்னதான் செய்ய முடியும்? மனிதர்கள் மனித சாத்தியமான காரியத்தைத் தானே செய்யலாம்?

"பின்னர், சட்ட சபை—பார்லிமெண்டுகளுக்கு அபேட்சகர்கள் தேர்ந்தெடுப்பதில் பிசகு ஏற்படாதிருக்கவும் எவ்வளவு தெளிவான முறையை வகுத்திருக்கிறார்கள், பாருங்கள்!

"என்ன? என்ன சொல்கிறீர்! ஆம், தேர்தல் திட்டத்தில் அவ்வளவு வசீகரமான அம்சம் ஒன்றுமில்லை என்பது உண்மைதான்; ஒத்துக் கொள்கிறேன். ஆனால் வசீகரமான திட்டங்களைப் போட்டு விட்டுக் காரியத்தில்

நடத்தாமலிருப்பதில் என்ன பயன்! கையினால் ஆகாதவர்கள் திட்டத்தைப் பலமாகப் போடுவார்கள்; செயலில் ஒன்றும் நடத்தமாட்டார்கள். நம் காங்கிரஸ் தலைவர்கள் மிதமான திட்டத்தைப் போட்டு அதிகமாகச் செய்து காட்டுவார்கள்.

"முதன் முதலில் காங்கிரஸ் அதிகாரத்துக்கு வந்தபோது சொன்னதை யெல்லாம் நிறைவேற்றவில்லையா! 'கள்ளுக்கடையை மூடுவோம்' என்றார்கள்; மூடினார்கள். 'ஆலயங்களைத் திறப்போம்' என்றார்கள்; திறந்தார்கள். 'ஜமீன்தாரியை ஒழிப்போம்' என்றார்கள்; ஒழித்தார்கள்.

"அவ்விதமே இப்போது 'அடுத்த ஐந்து வருஷத்தில் நாட்டின் பொருளாதார நிலைமையை உயர்த்துவோம்' என்று கூறியிருக்கிறார்கள்; கூறியபடியே செய்து காட்டுவார்கள் என்பது நிச்சயம்.

"சுற்றி வளைத்து எப்படிப் பார்த்தாலும் காங்கிரஸைக் காட்டிலும் நல்ல ஸ்தாபனம் வேறு எது சொல்லுமே, பார்க்கலாம். காங்கிரஸ் தலைவர்களை விடச் சிறந்த தலைவர்கள் தான் எங்கே இருக்கிறார்கள்!

"அதோ லியாகத் அலிகான் உறுமிக் கொண்டிருக்கிறார்! நாளைக்குப் பாகிஸ்தான் நம்முடன் வலுச் சண்டைக்கு வந்தால், அதைச் சமாளிக்கக் கூடியவர்கள் காங்கிரஸ் தலைவர்களைத் தவிர வேறு யார்! சொல்லும், பார்க்கலாம்!

"ஆகையால், நேருஜிக்கும், நேருஜி தலைமை வகிக்கும் காங்கிரஸுக்கும்தான் நமது வோட்டு; வேறு யாருக்கும் இல்லை! தெரிகிறதா!......

"ஆனால் இத்தனை நேரமும் நீர் ஏன் அமரவும் இல்லை, உட்காரவும் இல்லை, வீற்றிருக்கவும் இல்லை! ஏன் நின்று கொண்டேயிருக்கிறீர்! ஏன் ஒரு வார்த்தையும் பேசாமல் மௌனம் சாதிக்கிறீர்!......" என்று ஸ்ரீ பொதுஜன ஸ்வாமி கூறி மூச்சு விடுவதற்காகப் பேச்சை நிறுத்தவும், நாம், "ஐயா! நீர் எமது நாற்காலியில் உட்கார்ந்திருப்பதால் நாம் அமரவோ, உட்காரவோ, வீற்றிருக்கவோ முடியவில்லை. நீர் மூச்சு விடாமல் பேசி வந்ததால் நாம் ஒரு வார்த்தை பேசவும் முடியவில்லை!" என்றோம்.

"அடாடா! அப்படியா! இதோ உமது நாற்காலி!" என்று சொல்லி ஸ்ரீ பொதுஜனம் எழுந்தார்.

"இப்படியே ஒவ்வொரு வாரமும் வந்திருந்து நம்முடைய வேலையை நீரே செய்து விட்டால் நலமாயிருக்கும்!" என்று சொல்லி விடை கொடுத்தோம். பின்னர் ஏன் அவ்விதம் சொன்னோம் என்று கவலைப்பட்டோம்.

ஏனெனில், ஸ்ரீ பொதுஜனம் ரொம்பப் பொல்லாதவர்! நாம் சொன்னபடியே ஒரு வேலை செய்தாலும் செய்து விடுவார். ஒரு நாள் தினப் பத்திரிகைகளை நிறுத்தினால் ஸ்ரீ பொதுஜனம் அவர்களே பத்திரிகை போட ஆரம்பித்து விடக்கூடும் என்று பயந்து தானே அகில இந்தியப் பிரபல பத்திரிகாசிரியர்கள் தங்கள் தீர்மானத்தைத் தாங்களே ரத்து செய்து 12-ம் தேதி ஹர்த்தாலைக் கை விட்டு விட்டார்கள்!

# திவாகரின் காது செவிட்டுக் காதா?

நமது இந்தியக் குடியரசு சர்க்காரில் உள்ள மந்திரிகளிலேயே கனம் திவாகர் அவர்கள் ஒரு ரஸிக சிரோமணி; சங்கீதப் பிரியர்; கலை ஆர்வம் உள்ளவர். ஆகையால் அவர் விளம்பர இலாகா மந்திரியானார் என்றும், திரைப் பட இலாகாவும் வானொலி இலாகாவும் அவர் நிர்வாகத்தின் கீழ் வந்தன என்றும் அறிந்த போது மிக மகிழ்ந்தோம். அந்த மகிழ்ச்சி இறந்த கால மகிழ்ச்சி யாயிற்று. எப்படிப்பட்ட தீர சிகாமணியையும் விழுங்கி ஏப்பமிடும் சர்க்கார் இயந்திர பூதம் திவாகரையும் விழுங்கி ஏப்பம் விட்டு விட்டது!

சென்ற வாரத்தில் திவாகர் சென்னை வந்திருந்தார். ஆரம்ப சூரத்தனத்துடனே ஆரம்பிக்கப்பட்டு இப்போது அனாதைக் குழந்தையாக விடப்பட்டிருக்கும் கர்நாடக சங்கீதக் கல்லூரியில் திவாகர் ஒரு பிரசங்கம் செய்தார். அதில் நமது இந்தியாவின் பழமையான சங்கீதக் கலையைப் பாராட்டிப் பேசினார். அதைப் போற்றிப் பாதுகாக்க வேண்டிய அவசியம் பற்றிப் பேசினார். கர்நாடக சங்கீதம்—ஹிந்துஸ்தானி சங்கீதம் இரண்டும் பாரத சங்கீதத்தின் இரு அம்சங்கள் என்று அழகாகக் குறிப்பிட்டார். அதிலிருந்து அவர் 'பத்தாம் பசலி'ப் பேர்வழி என்பதையும் தெளிவாக வெளியிட்டுக் கொண்டார்!

ஏனெனில், இப்போது இந்திய நாட்டில் கர்நாடக சங்கீதம் — ஹிந்துஸ்தானி சங்கீதம் என்ற பாகுபாடு கிடையாது. இந்த இரண்டு பிரிவுகளுக்குப் பதிலாக வேறு இரண்டு பிரிவுகள் அமுலுக்கு வந்திருக்கின்றன. ஒன்று சங்கீதம்; இன்னொன்று மங்கேஷ் கீதம்.

லதா மங்கேஷ் என்ற மங்கையர் திலகம் வட நாட்டில் தோன்றி ஸினிமாக்களுக்கு இரவல் குரல் கொடுக்கத் தொடங்கினாள். அவ்வளவுதான்; சங்கீதம் தன் பீடத்திலிருந்து இறங்கி ஒதுங்கி நின்று மங்கேஷ் கீதத்துக்கு ஆசனத்தைக் கொடுத்து விட்டது!

இமயமலையிலிருந்து கன்னியாகுமரி வரையில் மங்கேஷ் கீதம் பரவி விட்டது.

சங்கீத ரஸிகத் தன்மைக்குப் பெயர் போன மயிலாப்பூரின் வீதிகளில் சென்றால், இப்போதெல்லாம் சங்கீதம் கேட்கமுடியாது. மங்கேஷ் கீதம் கிராமபோனிலோ, அல்லது ரேடியோவிலோ, அல்லது குழந்தைகளின் இளங் குரலிலோ கேட்டுக் கொண்டிருக்கும்.

"லாரலப்பா" "லாரலப்பா" என்ற அலறல் சத்தம் ஒரு வீட்டுக்குள்ளிருந்து வரும்.

அதைத் தமிழ்ப் படுத்தி "போடடப்பா" "போடடப்பா" என்ற கூக்குரல் இன்னொரு வீட்டிலிருந்து வரும்.

"டிக்கி டிக்கி டுக்கூ டுக்கூ" என்று அடுத்த வீட்டி லிருந்து வயிற்றில் அடித்துக் கொள்ளும் சத்தம் கேட்கும்.

மற்றொரு வீட்டிலிருந்து "மேரே தில் மே ஹோ மேரே தில்மே" என்று ஆணும் பெண்ணுமாக இருவர் மாறி மாறி மார்பில் அடித்துக்கொண்டு அலறும் சத்தம் வரும்.

நாடெங்கும் இதே நிலைமைதான்; இதே கர்ண கடூரக் கூப்பாடுதான்!



தமிழ் நாட்டில் முப்பது வருஷத்துக்கு முன்னால் 'டப்பா' பாட்டு என்று கேள்விப்பட் டிருக்கிறோம். அது கேவலமான ஹிந்துஸ்தானி சங்கீதத்தைச் சேர்ந்தது என்றும், ரஸிகத் தன்மையற்ற மட்டமான ஜனங்கள் பாடுவது என்றும் கேட்டிருக்கிறோம்.

நாளது 1950—51ம் வருஷத்தில் தமிழ்நாடு முழுதும் 'டப்பா' மெட்டுப் பாடல்களைத் தவிர வேறு எதுவும் கேட்க முடிவதில்லை.

இந்தியா தேசம் முழுவதிலும் இப்படித்தான்.

நாலு வருஷத்துக்கு முன்னால் "ரத்தன்" என்னும் மட்ட ரகமான ஹிந்தி ஸினிமா ஆரம்பித்த கைங்கரியம் இந்த வருஷத்தில் பூர்த்தியாகி விட்டது.

நாடெங்கும் சங்கீத ரஸிகத்தன்மை அதல பாதாளத்தில் விழுந்து, இதைக் காட்டிலும் தாழ்ந்து கேடாக முடியாது என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது.




சில வருஷங்களுக்கு முன்புகூட சாந்தா ஆப்தே, ஸைகல், பங்கஜ மல்லிக் முதலியவர்களின் ஹிந்தி மெட்டுக்கள் தமிழ் நாட்டில் பிரபலமானதுண்டு. அவற்றில் ஹிந்துஸ்தானி சங்கீதத்தின் சிறந்த அம்சங்கள் சில இருந்தன.

இப்போது வருகிற ஹிந்தி ஸினிமா கீதங்களும் அவற்றைக் காப்பி அடித்து வெளி வரும் தமிழ் தெலுங்கு ஸினிமா கீதங்களும் ஹிந்துஸ்தானி சங்கீதத்தைச் சேர்ந்தவையல்ல. ஸ்பானிஷ் சங்கீதம், மெக்ஸிகோ சங்கீதம், எஸ்கிமோ சங்கீதம், ஹாவாய் சங்கீதம் முதலிய பல சங்கீதங்கள் கலந்த பயங்கரமான உருத் தெரியாத கபந்த பிண்டமாக விளங்குகின்றன.

ஸினிமா முதலாளிகள் இத்தகைய பயங்கர சங்கீதத்தைக் கையாளுவதில் வியப்பில்லை. அவர்களிடம் வேறு உயர்தரமான காரியம் எதையும் எதிர்பார்க்க முடியாது. "பணமே தெய்வம்" "பாக்ஸ் ஆபீஸே கோவில்" என்ற மனப்பான்மையுடன் அவர்கள் படம் எடுக்கிறார்கள். அந்த நோக்கத்துக்காக எதை வேண்டுமானாலும் செய்வார்கள்.

ஆனால் குடியரசு இந்திய சர்க்கார் நடத்தும் வானொலி நிலையங்களில், ரஸிக சிகாமணியான திவாகரின் நிர்வாகத்தில், இந்த அபஸ்மார பயங்கர ராட்சத 'டப்பா' சங்கீதம் எதற்காக இவ்வளவு ரெத்தையுடன் ஒலிபரப்பப்படுகிறது என்பதுதான் தெரியவில்லை.

கனம் திவாகர் என்றாவது ஒருநாள் வானொலிப் பெட்டியடியில் உட்கார்ந்து, "நிரைகானம்" என்றும் "சித்திர சங்கீதம்" என்றும் விளக்குமாற்றுக்குப் பட்டுக் குஞ்சலம் கட்டி விளம்பரப்படுத்தி ஒலி பரப்பும் பாடல்களைக் கேட்டதுண்டா என்று ஆச்சரியமாயிருக்கிறது.

அப்படிக் கேட்டவராயிருந்தால் அவருடைய காது செவிட்டுக் காதாகவோ, அல்லது பாரதியார் கூறிய இரும்புக் காதாகவோ இருக்க வேண்டும்.

**ப**ண்டித நேரு தமது புத்தகத்தில் "எனக்கு அதிகாரம் இருந்தால் இந்தியாவிலுள்ள அத்தனை ஹார்மோனியப் பெட்டிகளையும் உடைத்துப் போட்டு விடுவேன்" என்று எழுதினர்.

அகில இந்திய ரேடியோ ஆரம்பித்த புதிதில் அதன் தலைமை நிர்வாகியாக வந்தவர் ஜவாஹரின் புத்தகத்தைப் படித்தவர். ஆகையால் அவர் "ரேடியோ நிலையங்களில் ஹார்மோனியமே கொண்டு வரக் கூடாது" என்று உத்தரவு போட்டார். "அடடா! வானொலி நிலையங்கள் நமது சங்கீதக் கலையை உத்தாரணம் செய்து விடும்!" என்று மகிழ்ந்தோம்.

இன்றைக்கு ஹார்மோனியத்தை விட மகா பயங்கரப் பேய்க் கூச்சல் போடும் பின்னணி சங்கீதத்துடன் கூடிய ஸினிமா இசைத் தட்டுகள் ஒவ்வொரு வானொலி நிலையத்திலிருந்தும் ஒலிபரப்பப்படுகின்றன.

ஜவாஹருக்குக் கேட்க அவகாசமிருந்து கேட்பாரானால் அவ்வளவு ரேடியோப் பெட்டிகளையும் உடைத்துப் போட்டுவிட முன் வருவார்.





மயிலாப்பூரில் ஜவந்த்மல் ஜெனகார் தர்ம சிகிச்சை சாலையைக் கனம் ராஜாஜி ஜூலை மாதம் 5ஆ. காலையில் திறந்து வைத்தார். ஸ்ரீ ஜெயின் வைத்திய உதவிச் சங்கத்தின் காரியதரிசி ஸ்ரீ லால்சந்த் தாதா, தலைவர் ஸ்ரீ ஜதன்லால் தாகா ஆகியவர்கள் ராஜாஜியை வைத்திய சாலைக்குள் அழைத்துச் செல்கிறார்கள். இருபத்தையாயிரம் ரூபாய் நன்கொடை அளித்த ஜெனகாரின் புதல்வர் மலர்ந்த முகத்துடன் தலைவர்களை வரவேற்கிறார்.

---

கனம் திவாகருக்கு நமது பழைய சங்கீதக் கலையில் உண்மையாக அபிமானம் இருக்குமானால் ரேடியோ நிலையங்களிலுள்ள ஸினிமா இசைத் தட்டுகளைச் சுக்கு நூறாக உடைத்து எறியட்டும். "இனிமேல் வாங்காதீர்கள்" என்று கட்டளை பிறப்பிக்கட்டும். அதை நிறைவேற்றுகிறார்களா என்றும் கவனிக்கட்டும்.

ஏனெனில் வானொலி நிலையங்களில் இப்போது பெரிய சம்பளங்கள் வாங்கிக்கொண்டு உத்தியோகம் பார்ப்பவர்கள், நமது பழமையான சங்கீதக் கலைக்காக எதுவும் செய்துவிடுவார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. அவர்கள் நவநாகரிக 'புஷ் கோட்' ரஸிக கணத்தைச் சேர்ந்தவர்கள். ஸ்பானிஷ் — மெக்ஸிகோ சங்கீதத்தின் திவ்யமான கலவைப் பின்னணியுடன் வரும் 'டப்பா' ஸினிமா கீதத்தைக் கேட்டுப் புளகாங்கித மடைவார்கள். "நமது சங்கீதக் கலை உயர்ந்து வருகிறது!" என்றும் பூரிப்புடன் சொல்லுவார்கள்.

கனம் திவாகர் சில நாள் நம் ரேடியோ நிலையங்களின் நிகழ்ச்சிகளை முழுமையும் காது கொடுத்துக் கேட்டு இந்த நிலைமைக்கு ஏதாவது பரிகாரம் உண்டு பண்ணினால் நம் சங்கீதம் பிழைக்கும். இல்லா விட்டால் 'பாரதிய சங்கீத'த்துக்கு இப்போதே முழுக்குப் போட்டு விட்டு வேறு காரியங்களைப் பார்க்கலாம்.

# நோய்களே! ஓடுங்கள்!

உலகத்திலிருந்து நோய்களை ஓட்டுவதற்கென்று எத்தனையோ முயற்சிகள் நடந்து வருகின்றன.

விஞ்ஞான நிபுணர்கள் புதிய புதிய மருந்துகளைக் கண்டு பிடித்து வருகிறார்கள்; சென்ற எட்டு வருஷங்களில் பென்ஸிலின் முதலிய பல அற்புத மருந்துகள் வந்திருக்கின்றன.

நமது யோகாசன நிபுணர் ஸ்ரீ வி. என். குமாரசாமி போன்றவர்கள் "நோய்களை ஒழிப்போம்; மருந்துப் பேய்களையும் ஒழிப்போம்!" என்று சபதம் கூறுகிறார்கள்.

ஆயினும் மக்களில் பெரும்பாலோருக்கு மருந்துகளில் நம்பிக்கை குன்றவில்லை.

வேறு யாருக்கு மருந்தில் நம்பிக்கை இல்லாமற் போனாலும் சென்னை நகரவாசியான ஸ்ரீ லால்சந்த் தாதா என்பவருக்கு ஒருநாளும் மருந்தில் நம்பிக்கை குன்றாது.

மருந்து விற்பனையின் மூலம் லட்சாதிபதியானவருக்கு மருந்தில் எப்படி நம்பிக்கை இல்லாமற் போக முடியும்!

பெரிய மீசையும் அதைவிடப் பெரிய மஞ்சள் வர்ணத் தலைப்பாகையும் படைத்த ஸ்ரீ லால்

சந்த் தாதா பெரிய இருதயமும் படைத்தவர் என்பது சமீப காலத்தில் வெளியாகி வந்தது. பல தர்மப் பணிகளுக்கு அவர் தாராளமாகப் பண உதவி செய்து வந்திருக்கிறார்.

அந்த தர்மங்களில் சிறந்த ஒரு தர்மத்தைச் செய்யும் யோசனை அவருடைய மனதில் சென்ற அக்டோபர் மீ 21உ யன்று உதயமாயிற்று.

ஸ்ரீ லால் சந்த் தாதா ஜெயின மதத்தைச் சேர்ந்தவர். நோயாளிகளுக்குத் தொண்டு செய்வதை அறங்களில் தலை சிறந்த அறம் என்று ஜெயின சமயம் வற்புறுத்துகிறது.

எனவே, நோயுற்ற மக்களுக்குத் தரும சிகிச்சை யளிப்பதின் மூலம் சமூகத்துக்குத் தமது கடமையைச் செய்ய வேண்டும் என்று ஸ்ரீ லால்சந்த் தாதா முடிவு செய்தார்.

முதலில் தம் புதல்வர் ஸ்ரீ மிலாப் சந்த் தாதா விடம் சொன்னார். பின்னர், மற்ற இஷ்ட மித்திர பந்து ஜனங்களிடம் சொன்னார். எல் லாரும் ஒருமுகமாக ஒப்புக் கொண்டார்கள். "ஸ்ரீ ஜெயின் மெடிகல் ரிலீப் சொஸைடி" உதயமாயிற்று.

சென்னை நகரில் பல இடங்களிலும் தர்ம வைத்திய சாலைகள் நடத்துவ தென்பது இச் சங்கத்தின் நோக்கம். இது வரையில் பெரம் பூரில் ஒரு வைத்திய சாலையும் ராயபுரத்தில் ஒரு வைத்தியசாலையும் மயிலாப்பூரில் ஒரு வைத்தியசாலையும் திறந்திருக்கிறார்கள்.

ஒவ்வொரு வைத்தியசாலைக்கும் ஒவ்வொரு ஜெயினச் செல்வர் இருபத்தையாயிரம் ரூபாய் நன்கொடை அளித்திருக்கிறார். சங்கத்தார் மேலும் இருபத்தையாயிரம் போட்டு வைத்திய சாலை நடத்தி வருகிறார்கள்.

மூன்றாவதாகத் திறக்கப்பட்ட மயிலாப்பூர் தர்ம வைத்தியசாலையை நாளது ஜூலை மாதம் 5-ந் தேதி காலையில் கனம் ராஜாஜி அவர்கள் திறந்து வைத்தார்கள்.

உடல் மெலிவு காரணமாக ராஜாஜி இம் முறை சென்னைக்கு வந்திருந்த சமயம் எந்தவித அலுவலும் ஒப்புக் கொள்ளவில்லை. ஆயினும் இந்தத் தர்ம வைத்தியசாலையைத் திறந்து வைக்க ஒப்புக் கொண்டார் என்பதிலிருந்து, இந்தத் திருப்பணியை ராஜாஜி எவ்வளவு தூரம் பாராட்டுகிறார்கள் என்று அறியலாம்.

* * *

மேற்கூறிய தர்ம வைத்திய சாலைகளில் சிகிச்சை முழு தர்மமாக அளிக்கப்படுவதில்லை. "மருந்துக்கு இரண்டணா" என்றும் "ஊசிக்கு எட் டணா" என்றும் கட்டணம் பெற்றுக்கொண்டு சிகிச்சை செய்கிறார்கள்.

இதற்கு அவசியம் என்ன வென்பதை ராஜாஜி அவர்களே நன்கு விளக்கினார்கள். மருந்தை முற்றும் இலவசமாக்கி விட்டால் வியாதி இல்லாதவர்களே முண்டி அடித்துக் கொண்டு முன்னால் போய் நின்று விடுவார்கள்! உண்மையில் நோய்ப்பட்டு மருந்துக்கு அவசிய முள்ளவர்களுக்குக் கிடைக்காமற் போய் விடும்!

இந்தச் சிறிய கட்டணங்கள், தேவையில்லா தவர்கள் வருவதை ஓரளவு தடை செய்யும்.

"இலவசமாக வாங்கிச் சாப்பிடும் மருந்து உடம்பில் ஒட்டாது" என்ற நம்பிக்கை யுள்ள வர்களையும் திருப்தி செய்யும் அல்லவா!

மேற்கூறிய ஒவ்வொரு வைத்தியசாலையிலும் தினம் சுமார் இருநூற்றைம்பது பேர் வந்து சிகிச்சை பெற்றுப் போகிறார்கள் என்பதி லிருந்து இத்தகைய வைத்தியசாலைகளின் அவசியம் நன்கு வெளியாகிறது.

அரசாங்க ஆஸ்பத்திரிகளில் இப்போதெல் லாம் கூட்டம் தாங்க முடிவதில்லை; வருகிற வர்கள் எல்லாருக்கும் சிகிச்சை செய்ய முடிவது மில்லை. சென்னை நகரத்தில் ஐந்து லட்சம் பேர் வசித்த போது ஏற்பட்ட வைத்திய சாலைகள் இப்போது பதினைந்து லட்சம் பேருக் கும் சேவை செய்ய வேண்டி யிருக்கிறது.

இந்தக் காரணத்தினால் "ஜெனரல் ஆஸ்பத் திரிக்குள்ளே போய் வருவதைக் காட்டிலும் யம லோகத்துக்கே போய் வந்து விடலாம்" என்று ஜனங்கள் சொல்லும்படி ஆகிவிட்டது.

ஆகவே ஜெயின சங்கத்தார் செய்ய முன் வந்திருக்கும் சேவை மிக முக்கியமான சேவை யாகும். இதைச் சுகாதார மந்திரி கனம் டாக்டர் ராஜன் அவர்களும், சென்னை வைத் திய இலாகாத் தலைவர் டாக்டர் வாசுதேவ ராவ் அவர்களுமே ஒப்புக்கொண்டு ஜெயின சங்கத்தின் சேவையைப் பாராட்டினார்கள் என்றால், அவர்களுடன் சேர்ந்து நாமும் மன மாரப் பாராட்ட வேண்டியதுதானே!

* * *

இமயத்திலிருந்து குமரி வரையில் இந்தியா ஒரே தேசம்,—இந்திய மக்கள் ஒரே ஜாதி யினர்,—என்னும் எண்ணத்தை வளர்க்க நமது அரும்பெரும் தலைவர்கள் பாடுபட்டு வரு கிறார்கள். காந்தி மகான் அந்த இலட்சியத்துக் காகத் தமது உயிரையே அர்ப்பணம் செய்தார்.

ஆனாலும் நிலைமையிலேயே நாட்டங் கொண்ட சிலர் இம்மாகாணத்தில் வடநாட்டார்—தென் னாட்டார் என்னும் வேற்றுமை உணர்ச்சியை வளர்க்க முயன்று வருகிறார்கள். நமது ஜெயின சகோதரர்களைப் போலவே மற்றும் சென்னை யில் தொழில் நடத்தும் வடநாட்டு வர்த்தகப் பிரமுகர்களும் தாங்கள் வாழும் இடத்தில் நல்ல தர்ம காரியங்களுக்கு உதவ முன் வர வேண்டும். அப்படிப் பலரும் முன் வந்தால் வேற்றுமையை வளர்க்கும் தீய முயற்சிகளுக் குச் சிறிதும் பலம் ஏற்படாது.

வடநாட்டுச் சகோதரர்களுக்கு உபதேசம் செய்வதுடன் நாமும் நின்றுவிடக் கூடாது. சென்னையில் தமிழர்களிலும் ஆந்திரர்களிலும் தர்ம சிந்தையுள்ள செல்வர்கள் எத்தனையோ பேர் இருக்கிறார்கள். இவர்களும் நம் ஜெயின சகோதரர்கள் தொடங்கியுள்ள நல் முயற்சியில் கலந்து ஒத்துழைக்க வேண்டும். இருபத்தைந்து ரூபாய் சந்தா கொடுத்து மேற்படி தர்ம வைத்திய சங்கத்தில் யார் வேணுமானாலும் அங்கத்தினராகலாம் என்று அறிகிறோம். சென்னையில் வாழும் தமிழ் ஆந்திர சகோதரர் களிலும் பலர் மேற்படி சங்கத்தில் சேர்ந்து நம் ஜெயின சகோதரர்களுக்கு உற்சாக மளித்தால் எவ்வளவு நன்றா யிருக்கும்!

# அக்கப் போர்

"அபாடான் எண்ணெய் வயலில் எண்ணெய் வடிகட்டுவதை நிறுத்த வேண்டும். குரூட் எண்ணெய் உற்பத்தியையும் நிறுத்த வேண்டியதுதான்." —பிரிட்டன் அறிக்கை

"பிரிட்டிஷ் சர்க்காரின் இந்தப் போக்கை வடிகட்டின முட்டாள்தனம், குருடான கொள்கை" என்று பாரசீக சர்க்கார் வர்ணிக்கலாம்.

★

"எண்ணெய் ஏற்றுமதி நின்று போனதால் குறையும் வருமானத்தை ஈடு செய்ய வரி போட வேண்டிவருமே" என்று பாரசீகப் பிரதமர் மிகவும் வருந்துகிறார் என்று டெஹரான் செய்தி கூறுகிறது.

வேண்டுமானால், வரி போடச் சிறிதும் வருந்தாத மந்திரி ஒருவரை நாம் பெர்ஷியாவுக்கு அனுப்பி வைக்கலாம்.

★

"சாலையோர மரங்களைத் திருட்டுத்தனமாக யாராவது வெட்டினால், அதை சர்க்காருக்கு அறிவிக்கும் பட்சத்தில் வெகுமானம் அளிக்கப்படும்." —ஒரு அதிகாரி

யாருக்கு வெகுமானம்! திருட்டுத்தனமாக மரங்களை வெட்டினவர்களுக்கா!

★

"பீபிள்ஸ் பார்க்கில் கருங்காலிக் கன்றுகள் நடப்பட்டன."
—சென்னை, வனமகோத்ஸவச் செய்தி

"கருங்காலிகளை அப்படித்தான் குழி தோண்டிப் புதைக்க வேண்டும்" என்கிறார் ஸ்டிரைக் செய்துள்ள தோழர் ஒருவர்.

★

"134 கோடி ரூபாய் பெறுமான ஜவுளியும் நூலும் வெளி நாடுகளுக்கு அனுப்பப்பட்டுள்ளன." —இந்திய சர்க்கார் அறிக்கை

அதுதான் இங்கு கோடி வேஷ்டி வாங்குவதற்கு ஊரின் ஒரு கோடியிலிருந்து மறு கோடி வரை அலையவேண்டியிருக்கிறது என்கிறார் ஒரு குடும்பஸ்தர்.

★

"சட்ட ஞானம் பெற்ற நேபாளிகள் யாரும் இல்லாததால் நேபாளப் பிரஜையல்லாத அந்நியரை நீதிபதிகளாக நியமிப்பதற்காக நேபாள அரசியல் சட்டம் திருத்தப்பட்டுள்ளது."
—காட்மாண்டு செய்தி

இப்படி நியமிக்கப்படும் அந்நிய நீதிபதிகள் சட்டத்துக்கு அந்நியமான முறையில் நடந்து கொள்ள மாட்டார்கள் என்று எதிர்பார்க்கலாம்.

★

"சில தலைவர்கள் போய் விட்டாலும், பல காங்கிரஸ்காரர்களிடம் நாணயம் இருப்பதால் காங்கிரஸ் இன்னமும் பலம் பொருந்திய ஸ்தாபனமாகவே இருக்கிறது." —ஒரு மந்திரி

வரப்போகும் பொதுத் தேர்தலுக்கு அந்த நாணயம் வெகு உபயோகமாக இருக்கலாம்!

"நடமாடும் பாடசாலைகள் வேண்டும்."
—ராஜாஜி

பிள்ளைகளை பெஞ்சியின்மீது நிற்க வைப்பது அப்பொழுது முடியாதே என்று ஒரு உபாத்தியாயர் கவலைப்படுகிறாராம்!

★

"இங்குள்ள அஞ்சி என்ற மலைக் கிராமத்தில் ஒரு தம்பதிக்காவது குழந்தை கிடையாது."
—அம்பாலா செய்தி

பிரம்மதேவன் தன் கை வரிசையைக் காட்ட அஞ்சியுள்ள இந்த அஞ்சி கிராமத்துக்கு நம் சர்க்கார் ஏதாவது பரிசுகள் வழங்கலாம்.

★

"மரண வரியை மத்திய சர்க்கார் விதித்தால் ராஜ்ய சர்க்கார்கள் அதில் ஒரு பங்கைப் பெற நியாயமுண்டு." —கனம் கோபால ரெட்டி

நியாயம்தானே! மரணமடைந்தோரின் மரணத்துக்கு ராஜ்ய சர்க்கார்களும் தங்கள் பங்கைச் செய்திருக்கலாம் அல்லவா!

★

"கூவம் நதியில் விழுந்து ஒருவர் மரணம்."
—சென்னைச் செய்தித் தலைப்பு

கூவம் நதியில் விழுந்தவர் பலத்த காயங்களின் விளைவாகத்தான் மரணமடைந்திருக்க வேண்டும்!

★

"கொரியா போர் நிறுத்தப் பேச்சு வார்த்தைகளில் முட்டுக்கட்டை ஏற்பட்டிருக்கிறது."
—சில தலைப்புகள்

இது என்ன அக்கப் போர்!

★

"இப்பொழுது காந்திஜி உயிருடன் இருந்தால் அவருக்குச் சிறைதான் கிடைக்கும்."
—அஸ்ஸாமில் கிருபளானி

பூகம்பத்தைக் கண்டே மனம் கலங்காத அஸ்ஸாம் மக்கள் ஸ்ரீ கிருபளானியின் இந்தப் பேச்சைக் கேட்டா பயந்துவிடப்போகிறார்கள்!




பதினெட்டாம் அத்தியாயம்

## துரோகத்தில் எது கொடியது?

**ப**ழந் தமிழ் நாட்டின் சரித்திரத்தைப் படித்தவர்கள் அந்நாளில் பெண்மணிகள் பலர் சமூக வாழ்வின் முன்னணியில் இருந்திருப்பதை அறிவார்கள். மன்னர் குலத்தில் பிறந்த மாதரசிகள் மிகவும் கௌரவிக்கப்பட்டார்கள். சோழ குலத்தில் பிறந்த பெண்மணிகளும் வாழ்க்கைப்பட்ட பெண்மணிகளும் சொந்தமாகச் சொத்துரிமை பெற்றிருந்தார்கள். ஒவ்வொருவருக்கும் தரவாரியாகக் கிராமங்களும் நன்செய் புன்செய் நிலங்களும் கால்நடைச் செல்வமும் இருந்தன. இந்த உடைமைகளை அவர்கள் எவ்வாறு உபயோகித்தார்கள் என்பதை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். பலர் ஆலயங்களில் தங்கள் பெயரால் பலவித திருப்பணிகள் நடைபெறுவதற்குச் சொத்துக்களை உபயோகப்படுத்தினார்கள். திருவிளக்கு ஏற்றுதல், திருமாலை புனைந்து சாற்றுதல், தேசாந்திரிகளுக்கும் சிவனடியார்களுக்கும் திருஅமுது செய்வித்தல் — ஆகியவற்றுக்குப் பல அரசகுல மாதர்கள் நிவந்தங்கள் ஏற்படுத்திச் சிலாசாஸனம் அல்லது செப்புப் பட்டயத்தில் அவற்றைப் பொறிக்கும்படி செய்தார்கள்.

அரண்மனைப் பெண்டிர் ஆலயத் திருப்பணி செய்தல் அந்த நாளில் பொது வழக்கா யிருந்திருக்க, சுந்தர சோழரின் அருமைப்புதல்வி குந்தவைப் பிராட்டி மட்டும் வேறொரு வகை அறத்துக்குத் தம் உடைமைகளைப் பயன்படுத்தினார். நோய்ப்பட்டிருந்த தம் தந்தையின் நிலைமையைக் கண்டு இரங்கியதனால்தானோ, என்னமோ, அவருக்கு நாடெங்கும் தர்ம வைத்திய சாலைகளை நிறுவ வேண்டும் என்னும் ஆர்வம் உண்டாயிற்று. பழையாறையில் பராந்தக சக்கரவர்த்தியின் பெயரால் ஓர் ஆதுரசாலை ஏற்படுத்தியிருந்ததை முன்னமே பார்த்தோம். அதுபோலவே தஞ்சையில் தன் தந்தையின் பெயரால் ஆதுரசாலை அமைப்ப




தற்குக் குந்தவைதேவி ஏற்பாடு செய்திருந்தார். இந்த விஜயதசமி தினத்தில் அந்த ஆதுரசாலையை ஆரம்பிக்கவும் அதற்குரிய தான சாஸனங்களை எழுதிக்கொடுக்கவும் ஏற்பாடாகியிருந்தது.

* * *

**த**ஞ்சைக் கோட்டைக்கு வெளியேயுள்ள புறம்பாடியில், பெருமான் கோயிலுக்கு எதிர்ப்பட்ட கருட மண்டபத்தில்; 'சுந்தரசோழ ஆதுரசாலை'யின் ஆரம்ப வைபவம் நடந்தது. திருமால் காக்கும் தெய்வமாதலாலும், கருடாழ்வார் அமுதம் கொண்டு வந்தவராதலாலும், விஷ்ணு கோயிலையொட்டிய கருட மண்டபத்தில் குந்தவைப் பிராட்டி ஆதுர சாலையை ஏற்படுத்தி வந்தார். இந்த வைபத்திற்காக, தஞ்சை நகர மாந்தரும் அக்கம் பக்கத்துக் கிராமவாசிகளும் கணக்கற்றவர்கள் கூடியிருந்தார்கள். ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் அலங்கார ஆடை ஆபரணங்கள் பூண்டு கோலாகலமாகத் திரண்டு வந்திருந்தார்கள். சக்கரவர்த்தியின் உடன் கூட்டத்து அமைச்சர்களும் பெருந்தர சிறுதர அதிகாரிகளும் சிலா சாஸனம் பொறிக்கும் கல் தச்சர்களும் செப்புப் பட்டயம் எழுதும் விசுவ கர்மர்களும் அரண்மனைப் பணியாளர்களும் ஏராளமாக வந்து கூடியிருந்தார்கள். தாரை, தப்பட்டை முதலிய வாத்தியங்களை எட்டுத்திசையும் நடுங்கும்படி முழங்கிக்கொண்டு வேளக்காரப் படையினர் வந்தார்கள். தஞ்சைக் கோட்டையின் காவல் படை வீரர்கள் வாள்களையும் வேல்களையும் சுழற்றி 'டணார்' 'டணார்' என்று சத்தப் படுத்திக் கொண்டு வந்தார்கள். பழுவேட்டரையர்கள் இருவரும் யானை மீதேறிக் கம்பீரமாக வந்தார்கள். இளவரசர் மதுராந்தக தேவர் வெள்ளைப் புரவியின் மேல் ஏறி உட்காரத் தெரியாமல் உட்கார்ந்து தவித்துக் கொண்டு வந்து சேர்ந்தார். இளவரசி குந்தவைப் பிராட்டியும் அவருடைய தோழிகளும் முதிய அரண்மனை மாதர் சிலரும் பல்லக்கில் ஏறிப் பவனி வந்தார்கள். இன்னொரு பக்கமிருந்து பழுவூர் இளைய ராணி நந்தினியின் பனை இலச்சினை கொண்ட தந்தப் பல்லக்கும் வந்தது.

அரண்மனை மாதர்களுக்கென்று ஏற்படுத்தியிருந்த நீலப்பட்டு விதானமிட்ட இடத்தில் குந்தவை தேவியும் பழுவூர் ராணியும் மற்ற மாதர்களும் வந்து அமர்ந்தார்கள்.

பிறகு, பெரிய பழுவேட்டரையர் சமிக்ஞை செய்ததின் பேரில் வைபவம் ஆரம்பமாயிற்று. முதலில் ஓதுவார் மூர்த்திகள் இருவர் "மந்திரமாவது நீறு" என்ற தேவாரப் பதிகத்தைப் பாடினார்கள். யாழ், மத்தளம் முதலிய இசைக் கருவிகளின் ஒத்துழைப்புடன் மிக இனிமையாகப் பாடப்பட்ட அந்தப் பாடலைக் கேட்டு மக்கள் மெய் மறந்திருந்தார்கள். அந்தப் பெரிய ஜனக் கூட்டத்தில் அப்போது நிச்சப்தம் நிலவியது.

ஆனால் அரண்மனைப் பெண்டிர் அமர்ந்திருந்த இடத்தில் மட்டும் மெல்லிய குரலில் இருவர் பேசும் சத்தம் எழுந்தது. பழுவூர் இளையராணி நந்தினி குந்தவையை நெருங்கி உட்கார்ந்து, "தேவி! முன்னொரு காலத்தில் சம்பந்தப் பெருமான் இந்தப் பாடலைப் பாடித் திருநீறு இட்டுப் பாண்டிய மன்னரின் நோயைத் தீர்த்தாரல்லவா? இப்போது ஏன் இந்தப் பாடலுக்கு அந்தச் சக்தி இல்லை? பாடலுக்குச் சக்தியில்லாவிட்டாலும் திருநீற்றுக்கும் சக்தி இல்லாமற்போய் விட்டதே? மருந்து, மூலிகை, மருத்துவர், மருத்துவசாலை, இவ்வளவும் இல்லாமல் இக் காலத்தில் முடியவில்லையே?" என்று கேட்டாள்.

"ஆம், ராணி! அந்த நாளில் உலகில் தர்மம் மேலோங்கி யிருந்தது. அதனால் மந்திரத் திருநீற்றுக்கு அவ்வளவு சக்தியிருந்தது. இப்போது உலகில் பாவம் மலிந்து விட்டது. அரசருக்கு விரோதமாகச் சதி செய்யும் துரோகிகள் நாட்டில் ஏற்பட்டிருக்கிறார்கள். இப்படியெல்லாம் முன்னே நாம் கேட்டதுண்டா? ஆகையால் தான் மந்திரத்தின் சக்தி குறைந்து மருந்து தேவையாகிவிட்டது!" என்று இளைய பிராட்டி கூறிப் பழுவூர் இளைய ராணியின் முகத்தை உற்றுப் பார்த்தாள்.

நந்தினியின் முகத்தில் எவ்வித மாறுதலையும் காணவில்லை. "அப்படியா? அரசருக்கு விரோதமாகச் சதி செய்யும் துரோகிகள் இந்த நாளில் இருக்கிறார்களா? அவர்கள் யார்?" என்று சாவதானமாகக் கேட்டாள்.

"அதுதான் எனக்கும் தெரியவில்லை. சிலர் ஒருவரைச் சொல்கிறார்கள்; சிலர் இன்னொருவரைச் சொல்கிறார்கள். எது உண்மை என்று கண்டு பிடிப்பதற்காக இன்னும் சில நாள் இங்கேயே இருக்கலாமென்று பார்க்கிறேன். பழையாறையில் இருந்தால் உலக நடப்பு என்ன தெரிகிறது?" என்றாள் குந்தவை.

"நல்ல தீர்மானம் செய்தீர்கள். என்னைக் கேட்டால் இங்கேயே நீங்கள் தங்கி விடுவது நல்லது. இல்லாவிட்டால் இராஜ்யம் குட்டிச் சுவராய்ப் போய்விடும். நானும் உங்களுக்கு என்னால் முடிந்த உதவி செய்வேன். எங்கள் வீட்டில் ஒரு விருந்தாளி வந்திருக்கிறான். அவனும் தங்களுக்கு உதவி செய்யக்கூடும்!" என்றாள்.

"அது யார் விருந்தாளி?" என்று குந்தவை கேட்டாள்.

"கடம்பூர் சம்புவரையர் மகன் கந்தமாறன். தாங்கள் அவனைப் பார்த்திருக்கிறீர்களா? தென்னைமர உயரமாய் வாட்டசாட்டமாய் இருக்கிறான். 'ஒற்றன்' என்றும் 'துரோகி' என்றும் ஓயாமல் பிதற்றிக் கொண்டிருக்கிறான். இராஜத் துரோகத்தைப் பற்றிச் சற்று முன் சொன்னீர்களே? இராஜத் துரோகத்தைக் காட்டிலும் பெரிய துரோகம் இன்னதென்று தங்களால் சொல்ல முடியுமா?"

"நன்றாய்ச் சொல்ல முடியும். கைப்பிடித்த கணவனுக்குப் பெண்ணாய்ப் பிறந்த ஒருத்தி துரோகம் செய்தால் அது இராஜத் துரோகத்தைக் காட்டிலும் கொடியதுதான்!"

இப்படிச் சொல்லிவிட்டுக் குந்தவை தேவி நந்தினியின் முகத்தை உற்றுப் பார்த்தாள். அவள் எதிர்பார்த்த மாறுதல் ஒன்றும் நிகழவில்லை. நந்தினியின் முகத்தில் முன்போலவே மோகனப் புன்னகை தவழ்ந்தது.

"தாங்கள் சொல்வது ரொம்ப சரி; ஆனால் கந்தமாறன் ஒப்புக் கொள்ள மாட்டான். 'எல்லாவற்றிலும் கொடிய துரோகம் சிநேகிதத் துரோகம்' என்று சொல்வான். அவனுடைய அருமை நண்பன் என்று கருதிய ஒருவன் ஒற்றனாக மாறிப் போனது மல்லாமல் இவனுடைய முதுகில் குத்

திப் போட்டுவிட்டு ஓடிப்போய் விட்டானாம். அதுமுதல் கந்தமாறன் இவ்விதம் பிதற்றிக் கொண்டிருக்கிறான்!"

"அது யார் அவன் அவ்வளவு நீசத்தனமான காரியத்தைச் செய்தவன்?"

"யாரோ வந்தியத் தேவனாம்! தொண்டை நாட்டில் திருவல்லம் என்னும் ஊரில் முன்னம் அரசு புரிந்த வாணர் குலத்தைச் சேர்ந்தவனாம்! தாங்கள் கேள்விப் பட்டதுண்டோ?"

குந்தவை தன் முத்துப் போன்ற பற்களினால் பவழச் செவ்விதழ்களைக் கடித்துக் கொண்டாள்.

"எப்போதோ கேட்டமாதிரி இருக்கிறது......பிற்பாடு என்ன நடந்தது?"

"பிற்பாடு என்ன? கந்தமாறனை முதுகில் குத்திப்போட்டு அவனுடைய சிநேகிதன் ஓடிவிட்டான். அந்த ஒற்றனைப் பிடித்து வருவதற்கு என் மைத்துனர் ஆள்கள் அனுப்பி யிருப்பதாகக் கேள்வி!"

"அவன் ஒற்றன் என்பது எப்படி நிச்சயமாய்த் தெரியும்?"

"அவன் ஒற்றனோ, இல்லையோ, எனக்கு என்ன தெரியும்? சம்புவரையர் மகன் சொல்லுவதைத்தான் சொல்லுகிறேன். தாங்கள் வேண்டுமானால் நேரில் அவனிடமே கேட்டு எல்லா விவரமும் தெரிந்து கொள்ளலாம்."

"ஆமாம்; சம்புவரையர் மகனை நானும் பார்க்க வேண்டியதுதான். அவன் பிழைத்ததே புனர் ஜன்மம் என்று கேள்விப்பட்டேன். அப்போது முதல் பழுவூர் அரண்மனையிலேதான் அவன் இருக்கிறானா?"

"ஆம்; காயம் பட்ட மறுநாள் காலையில் நம் அரண்மனையில் கொண்டு வந்து போட்டார்கள். காயத்துக்கு வைத்திய சிகிச்சை செய்ய வேண்டிய பொறுப்பும் என் தலையில் விழுந்தது. மெதுவாக உயிர் பிழைத்துக் கொண்டான்; காயம் இன்னும் முழுதும் ஆறியபாடில்லை!"

"நீங்கள் பக்கத்திலிருந்து பராமரித்தும் இன்னும் முழுதும் குணமாகவில்லை என்பது ஆச்சரியமான விஷயந்தான். ஆகட்டும், ராணி! நான் அவசியம் வந்து அவனைப் பார்க்கிறேன். சம்புவரையர் குலம் நேற்று மூன்றா நாள் ஏற்பட்டதா? பராந்தக சக்கரவர்த்தியின் காலத்திலிருந்து வீரப் புகழ் பெற்ற குலம் அல்லவா?......"

"அதனாலேயே நானும் சொன்னேன். கந்தமாறனைப் பார்க்கும் வியாஜத்திலாவது எங்கள் ஏழை அரண்மனைக்கு எழுந்தருளுவீர்கள் அல்லவா?" என்றாள் நந்தினி.

இதற்குள் தேவாரப் பாடல் முடிந்து தானசாஸன வாசிப்பு ஆரம்பமாகிவிட்டது. முதலில் சுந்தர சோழ சக்கரவர்த்தியின் திருமுகம் படிக்கப்பட்டது. "நமது திருமகளார் குந்தவைப் பிராட்டிக்கு நாம் சர்வமானியமாகக் கொடுத்திருந்த நல்லூர் மங்கலம் கிராமத்தின் வருமானம் முழுவதையும் இளைய பிராட்டியார் தஞ்சைப் புறம்பாடி ஆதுர சாலைக்கு அளிக்க உவந்திருப்பதால், அந்த ஊர் நன்செய் புன்செய் நிலங்கள் யாவற்றையும் 'இறையிலி' நிலமாகச் செய்திருக்கிறோம்" என்று அந்த ஓலையில் சக்கரவர்த்தி தெரியப்படுத்தி யிருந்தார். திருமந்திர ஓலை நாயகர் அதைப் படித்த பின் தனாதிகாரி பெரிய பழுவேட்டரையரிடம் கொடுக்க, பழுவேட்டரையர் அதை இரு கரங்களாலும் பெற்றுக் கண்களில் ஒற்றிக் கொண்டு கணக்காயரிடம் கொடுத்துக் கணக்கில் பதிய வைத்துக் கொள்ளும்படி சொன்னார்.

பிறகு குந்தவைப் பிராட்டியின் தான சிலா சாஸனம் படிக்கப்பட்டது. மேற் கூறிய கிராமத்துச் சர்வமானிய நிலங்களை அந்த ஊர் விவசாயிகளே சகல உரிமைகளுடன் அநுபவித்துக் கொண்டு தஞ்சாவூர் சுந்தர சோழ ஆதுர சாலை வைத்தியருக்கு ஆண்டு ஒன்றுக்கு இருநூறு கலம் நெல்லும் ஆதுர சாலையில் சிகிச்சை பெறும் நோயாளிகளுக்காகத் தினந்தோறும் ஐம்பது படி பசும்பாலும் ஐந்து படி ஆட்டுப் பாலும் நூறு இளநீரும் அனுப்ப வேண்டியது என்று கருங்கல்லில் செதுக்கப் பட்டிருந்ததுடன், எழுதியவன் பெயரும் எழுதியதை மேற்பார்வை செய்த அதிகாரிகளின் பெயர்களும் அதில் விவரமாகப் பொறிக்கப்பட்டிருந்தன.

அந்தச் சிலாசாஸனத்தைப் படித்த பிறகு, அங்கு இந்த வைபவத்துக்காக வந்திருந்த நல்லூர் மங்கல கிராமத் தலைவர்களிடம் ஒப்படைக்கப்பட்டது.

கிராமத் தலைவர்கள் சாஸனக் கல்லைப் பயபக்தியுடன் வாங்கிக் கொண்டு அருகில் நின்ற யானையின்மீது ஏற்றினார்கள். அப்போது "மதுரைகொண்ட கோ இராஜ கேசரி சுந்தரசோழ சக்கரவர்த்தி வாழ்க வாழ்க!" என்று ஆயிரமாயிரம் குரல்களில் எழுந்த ஒலி எட்டுத் திசையும் பரவியது. அந்தக் குரல் ஒலியுடன் போட்டியிட்டுக் கொண்டு நூறு அறப் பறைகளின் முழக்கம் எழுந்து வானை அளாவியது. பின்னர் வரிசைக் கிரமமாக "இளைய பிராட்டி குந்தவை தேவி வாழ்க!" "வீர பாண்டியன் தலை கொண்ட வீராதி வீரர் ஆதித்த கரிகாலர் வாழ்க!" "ஈழங் கொண்ட இளவரசர் அருள்மொழி வர்மர் வாழ்க!" "சிவஞான கண்டராதித்தான் தவப் புதல்வர் மதுராந்தக தேவர் வாழ்க!" என்றெல்லாம் கோஷங்களும் பிரதி கோஷங்களும் எழுந்தன. கடைசியில் "தனாதிகாரி, தானிய பண்டாரத் தலைவர், இறைவிதிக்கும் தேவர் பெரிய பழுவேட்டரையர் வாழ்க!" "தஞ்சைக் கோட்டைத் தலைவர் சின்னப் பழுவேட்டரையர் காலாந்தகண்டர் வாழ்க!" என்ற கோஷங்கள் எழுந்தபோது, ஒலியின் அளவு பெரிதும் குறைந்துவிட்டது. பழுவூர் வீரர்கள் மட்டும் அக் கோஷங்களைச் செய்தார்களே தவிரக் கூடியிருந்த பொதுமக்கள் அதிகமாக அதில் சேர்ந்து கொள்ளவில்லை. அப்போது பழுவூர் இளைய ராணியின் முகத்தைப் பார்க்கவேண்டுமென்று குந்தவைப் பிராட்டி முயற்சி செய்தும் பலிக்கவில்லை. முக்கியமாக ஆதித்த கரிகாலரைப் பற்றிய வாழ்த்தொலி எழுந்த சமயத்தில் நந்தினியின் முகத்தைப் பார்த்திருந்தால், இரும்பு நெஞ்சு படைத்த இளைய பிராட்டி கூடப் பெரிதும் திகில் கொண்டிருப்பாள் என்பதில் ஐயம் இல்லை.

## பத்தொன்பதாம் அத்தியாயம்

# "ஒற்றன் பிடிபட்டான்!"

அன்று நடந்த சம்பவங்கள் பெரிய பழுவேட்டரையருக்கு மிக்க எரிச்சலை உண்டு பண்ணியிருந்தன. சக்கரவர்த்தியிடமும் அவருடைய குடும்பத்தாரிடமும் மக்கள் கொண்டிருந்த விசுவாசத்தை வெளிப்படுத்திக் காட்டுவதற்கல்லவா அது ஒரு சந்தர்ப்பமாகப் போய் விட்டது? "ஜனங்களாம் ஜனங்கள்! அறிவற்ற ஆடுமாடுகள்! நாலு பேர் எந்த வழி போகிறார்களோ அதே வழியில் நாலாயிரம் பேரும் போவார்கள்! சுய அறிவைப் பயன்படுத்திக்கொள்ள எத்தனை பேருக்குத் தெரிகிறது?" என்று தமக்குள் அடிக்கடி சொல்லிக்கொண்டு பொருமினார். "சக்கரவர்த்தி சொர்க்கத்துக்குப் போவதற்குள்ளே சாம்ராஜ்யத்தைப் பாழாக்கி விட்டுத்தான் போவார் போலிருக்கிறது! 'இந்த ஊருக்கு வரியைத் தள்ளி விடு!' 'அந்தக் கிராமத்தை இறையிலிக் கிராமமாகச் செய்து விடு!' என்று கட்டளையிட்டுக் கொண்டே போகிறார்! கொஞ்சகாலத்துக்கெல்லாம் வரி கொடுக்கும் கிராமமே இல்லாமற் போய்விடும். ஆனால் போர்க்களத்துக்கு மட்டும் செலவுக்குப் பணமும் உணவுக்குத் தானியமும் அனுப்பிக் கொண்டே யிருக்க வேண்டும். எங்கிருந்து அனுப்புவது?" என்று அவர் இரைந்து கத்தியதைக் கேட்டு அவருடைய பணியாட்களே சிறிது பயப்பட்டார்கள். "அண்ணா! இப்படியெல்லாம் சத்தம் போடுவதில் என்ன பயன்? காலம் வரும் வரையில் காத்திருந்து காரியத்தில் காட்ட வேண்டும்!" என்று சின்னப் பழுவேட்டரையர் அவருக்குப் பொறுமை போதிக்க வேண்டியிருந்தது.

குந்தவை தம் அரண்மனைக்கு வரப் போகிறாள் என்று தெரிந்ததும் பெரியவரின் எரிச்சல் அளவு கடந்துவிட்டது. நந்தினியிடம் சென்று, "இது என்ன நான் கேள்விப் படுவது? அந்த அரக்கி இங்கு எதற்காக வரவேண்டும்? அவளை நீ அழைத்திருக்கிறாயாமே? அவள் உன்னை அவமானப் படுத்தியதையெல்லாம் மறந்து விட்டாயா?" என்று கேட்டார்.

"ஒருவர் எனக்குச் செய்த நன்மையையும் நான் மறக்க மாட்டேன்; இன்னொருவர் எனக்குச் செய்த தீமையையும் மறக்க மாட்டேன். இன்ன

மும் இந்த என் சுபாவம் தங்களுக்குத் தெரியவில்லையா?" என்றாள் நந்தினி.

"அப்படியானால் அவள் இங்கு எதற்காக வருகிறாள்?"

"அவள் இஷ்டம், வருகிறாள்! சக்கரவர்த்தியின் குமாரி என்ற இறுமாப்பினால் வருகிறாள்!"

"நீ எதற்காக அழைத்தாயாம்?"

"நான் அழைக்கவில்லை; அவளே அழைத்துக் கொண்டாள். 'சம்புவரையர் மகன் உங்கள் வீட்டில் இருக்கிறானாமே? அவனைப் பார்க்கவேண்டும்!' என்றாள். 'நீ வராதே!' என்று நான் சொல்ல முடியுமா? அப்படிச் சொல்லக்கூடிய காலம் வரும். அது வரையில் எல்லா அவமானங்களையும் நான் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டியதுதான்."

"என்னால் பொறுத்துக் கொண்டிருக்க முடியாது. அவள் வரும் சமயம் நான் இந்த அரண்மனையில் இருக்க முடியாது. இந்த நகரிலேயே என்னால் இருக்க முடியாது. மழபாடியில் கொஞ்சம் அலுவல் இருக்கிறது. போய் வருகிறேன்."

"அப்படியே செய்யுங்கள், நாதா! நானே சொல்லலாம் என்று இருந்தேன். அந்த விஷப் பாம்பை என்னிடமே விட்டு விடுங்கள். அவளுடைய விஷத்தை இறக்குவது எப்படி என்று எனக்குத் தெரியும். தாங்கள் திரும்பி வரும்போது ஏதேனும் சில அதிசயமான செய்திகளைக் கேள்விப்பட்டால் அதற்காகத் தாங்கள் வியப்படைய வேண்டாம்......"

"என்ன மாதிரி அதிசயமான செய்திகள்?"

"குந்தவைப் பிராட்டி கந்தமாறனைத் திருமணம் செய்து கொள்ளப் போவதாகவோ, ஆதித்த கரிகாலன் கந்தமாறனுடைய தங்கையை மணக்கப் போவதாகவோ கேள்விப்படலாம்..."

"ஐயையோ! இது என்ன சொல்கிறாய்? அப்படியெல்லாம் நடந்து விட்டால், நம்முடைய யோசனைகள் என்ன ஆகும்?"

"பேச்சு நடந்தால், காரியமே நடந்து விடுமா, என்ன? மதுராந்தக தேவருக்கு அடுத்த பட்டம் என்று உங்கள் நண்பர்களிடமெல்லாம் சொல்லி வருகிறீர்களே? உண்மையில் அப்படி நடக்கப் போகிறதா? பெண்ணைப் போல் நாணிக்கோணி நடக்கும் மதுராந்தகனுக்குப் பட்டம் கட்டுவதற்காகவா நாம் இவ்வளவு பாடு படுகிறோம்?" என்று கூறி நந்தினி தன் கரிய கண்களினால் பெரிய பழுவேட்டரையரை உற்று நோக்கினாள். அந்தப் பார்வையின் சக்தியைத் தாங்க முடியாத அக்கிழவர் தலைகுனிந்து அவளுடைய கரத்தை எடுத்துக் கண்ணில் ஒற்றிக் கொண்டு "என் கண்ணே! இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் நீ சக்கரவர்த்தினியாக வீற்றிருக்கும் நாள் சீக்கிரத்திலேயே வரும்!" என்றார்.

* * *

கந்தமாறன் தன்னைப் பார்க்கக் குந்தவை தேவி வரப் போகிறாள் என்று அறிந்தது முதல் பரபரப்பு அடைந்து தத்தளித்துக் கொண்டிருந்தான். குந்தவையின் அறிவும் அழகும் மற்ற உயர்வுகளும் நாடு அறிந்தவை அல்லவா? அப்படிப்பட்ட இளைய பிராட்டி தன்னைப் பார்ப்பதற்காக வருகிறாள் என்பது எவ்வளவு பெருமையான விஷயம்? இதற்காக உடம்பில் இன்னும் பல குத்துக்கள் பட்டு நோயாளாகவும் படுத்திருக்கலாமே? அடாடா! இந்த மாதிரி காயம் போர்க்களத்தில் தன்னுடைய மார்பிலே பட்டுத் தான் படுத்திருக்கக் கூடாதா? அச்சமயம் குந்தவை தேவி வந்து தன்னைப் பார்த்தால் எவ்வளவு கௌரவமாயிருக்கும்? அப்படிக்கின்றி, இப்போது ஒரு சிநேகிதன் செய்த துரோகத்தைப் பற்றிப் பலரிடம் படித்த பாடத்தையே யல்லவா அவளிடமும் படித்தாக வேண்டும்?

இடையிடையே அந்தப் பெண்ணரசியின் குடும்பத்தினருக்கு விரோதமாக அவன் ஈடுபட்டிருக்கும் இரகசிய முயற்சியைக் குறித்து நினைவு வந்து கொஞ்சம் அவனை வருத்தியது.

கந்தமாறன் யோக்யமான பிள்ளை. தந்திர மந்திரங்களும் சூது வாதுகளும் அறியாதவன். நந்தினியின் மோகன சௌந்தரியம் அவனைப் போதைக் குள்ளாக்கிய போதிலும் அவள் இன்னொருவரின் மனைவி என்ற நினைவினால் தன் மனத்துக்கு அரண் போட்டு வந்தான். ஆனால் குந்தவைப் பிராட்டியோ கலியாணம் ஆகாதவள். அவ



ளிடம் எப்படி நடந்து கொள்வது? எவ்வாறு பேசுவது? மனத்தில் வஞ்சம் வைத்துக் கொண்டு வெளியில் இனிமையாகப் பேச முடியுமா? அல்லது அவளுடைய அழகிலே மயங்கித் தன்னுடைய சபதத்தைக் கைவிடும்படியான மனத் தளர்ச்சி ஏற்பட்டு விடுமோ? அப்படி நேருவதற்கு ஒரு நாளும் இடங் கொடுக்கக் கூடாது ... ஆ! இளவரசி எதற்காக இங்கே நம்மைப் பார்க்க வர வேண்டும்? வரட்டும்; வரட்டும்! ஏதாவது மூர்க்கத் தனமாகப் பேசி மறுபடியும் வராதபடி அனுப்பி விடலாம்.

இவ்விதம் கந்தமாறன் செய்திருந்த முடிவு குந்தவைப் பிராட்டியைக் கண்டதும் அடியோடு கரைந்து மறைந்து விட்டது. அவளுடைய மோகன வடிவும் முகப் பொலிவும் பெருந்தன்மையும் அடக்கமும் இனிமை ததும்பிய அநுதாப வார்த்தைகளும் கந்தமாறனைத் தன் வயம் இழக்கச் செய்து விட்டன. அவனுடைய கற்பனா சக்தி பொங்கிப் பெருகியது. தன்னுடைய பெருமையைச் சொல்லிக் கொள்ள விரும்பாதவனைப் போல் நடித்து அதே சமயத்தில் அவளுடைய கட்டாயத்துக்காகச் சொல்கிறவனைப் போலத் தான் புரிந்த வீரச் செயல்களைச் சொல்லிக் கொண்டான். தோள்களிலும் மார்பிலும் இன்னும் தன் உடம்பெல்லாம் போர்க்களத்

தில் தான் அடைந்த காயங்களைக் காட்ட விரும்பாதவனைப்போல் காட்டினான். "அந்த சிநேகத் துரோகி வந்தியத்தேவன் என்னை மார்பிலே குத்திக் கொன்றிருந்தால் கூடக் கவலையில்லை. முதுகிலே குத்தி விட்டுப் போய் விட்டானே என்றுதான் வருத்தமா யிருக்கிறது. ஆகையினாலேதான் அவனுடைய துரோகத்தைப் பற்றிச் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. இல்லாவிடில், போரில் புறமுதுகிட்ட அபகீர்த்தி யல்லவா ஏற்பட்டுவிடும்? தோளிலோ மார்பிலோ குத்திக் காயப்படுத்தி யிருந்தால், அவனை மன்னித்து விட்டே இருப்பேன்!" என்று கந்தமாறன் உணர்ச்சி பொங்கக் கூறியது குந்தவைக்கு உண்மையாகவே தோன்றியது. வந்தியத்தேவன் இப்படிச் செய்திருப்பானோ, அவன் விஷயத்தில் நாம் ஏமாந்து போய்விட்டோமோ என்ற ஐயமும் உண்டாகி விட்டது. நடந்ததை விவரமாகச் சொல்லும்படி கேட்கவே, கந்தமாறன் கூறினான். அவனுடைய கற்பனா சக்தி அன்று உச்சத்தை அடைந்து நந்தினிக்கே வியப்பை உண்டாக்கி விட்டது.

"பாருங்கள், தேவி! கடம்பூரில் தங்கிய அன்றே அவன் என்னை ஏமாற்றி விட்டான். தஞ்சாவூருக்குப் புறப்பட்ட காரியம் இன்னதென்று சொல்லவில்லை. இங்கு வந்து ஏதோ பொய் அடையாளத்தைக் காட்டி உள்ளே நுழைந்திருக்கிறான். சக்கரவர்த்தியையும் போய்ப் பார்த்திருக்கிறான். ஆதித்த கரிகாலரிட மிருந்து ஓலை கொண்டு வந்ததாகப் புளுகி யிருக்கிறான். அத்துடன் விட்டானா? தங்கள் பெயரையும் சம்பந்தப்படுத்தி, தங்களுக்கும் ஓலை கொண்டு வந்திருப்பதாகச் சொல்லவே கோட்டைத் தலைவருக்குச் சந்தேகம் வந்துவிட்டது. அவன் ஒற்றனா யிருக்கலாம் என்று ஐயுற்று அவனைக் காவலில் வைக்கச் சொல்லி யிருக்கிறார். எப்படியோ தப்பித்



துப் போய்விட்டான். அது விஷயத்தில் அவனுடைய சமர்த்தை மெச்சத்தான் வேண்டும். நான் இந்தச் செய்திகளைக் கேட்ட போது என் சிநேகிதன் பகையாளியின் ஒற்றன் என்பதை மட்டும் நம்பவே இல்லை. அவனுடைய சுபாவத்திலேயே சில கோணல்கள் உண்டு. அப்படி ஏதோ அசட்டுத்தனம் செய்திருக்கிறான் என்று உறுதியாக நம்பினேன். 'எப்படியாவது அவனை நான் கண்டு பிடித்துத் திரும்ப அழைத்து வருகிறேன். அவனை மன்னித்து விடவேண்டும்' என்று கோட்டைத் தலைவரிடம் நிபந்தனை பேசிக் கொண்டு புறப்பட்டேன். கோட்டையைச் சுற்றியுள்ள வடவாற்றங்கரையோடு அந்த நள்ளிரவில் சென்றேன். யாரையும் பின்னோடு அழைத்துப் போய் என் நண்பனை அவமானப் படுத்த விரும்பவில்லை. கோட்டையிலிருந்து தப்பியவன் எப்படியும் மதின் வழியாகத் தான் வெளியில் வர வேண்டுமல்லவா? முன்னமே வெளியே வந்திருந்தாலும் பக்கத்துக் காடுகளிலே தான் மறைந்திருக்க வேண்டும். ஆகையால் வடவாற்றங்கரையோடு போனேன். ஒருவன் செங்குத்தான கோட்டை மதின் சுவர் வழியாக இறங்கி வருவது மங்கிய நிலா வெளிச்சத்தில் தெரிந்தது. உடனே அங்கே போய் நின்றேன். அவன் இறங்கியதும் 'நண்பா! இது என்ன வேலை?' என்றேன். அந்தச் சண்டாளன் உடனே என் மார்பில் ஒரு குத்து விட்டான். யானைகள் இடித்தும் நலுங்காத என் மார்பை இவனுடைய குத்து என்ன செய்யும்? ஆயினும் நல்ல எண்ணத்துடன் அவனைத் தேடிப் போன என்னை அவன் குத்தியது பொறுக்கவில்லை. நானும் குத்து விட்டேன். இருவரும் துவந்த யுத்தம் செய்தோம். அரை நாழிகையில் அவன் சக்தி இழந்து அடங்கிப் போனான். என்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். நானும் அவனை மன்னித்து, 'நீ வந்த காரணத்தை உண்மையாகச் சொல்லி விடு! நான் உனக்கு வேண்டிய உதவி செய்கிறேன்!' என்றேன். 'களைப்பாயிருக்கிறது, எங்கேயாவது உட்கார்ந்து சொல்கிறேன்' என்றான். 'சரி' என்று சொல்லி அழைத்துச் சென்றேன். முன்னால் வழி காட்டிக் கொண்டு போனேன். திடீரென்று அந்தப் பாவி முதுகில் கத்தியினால் குத்திவிட்டான். அரைச் சாண் நீளம் கத்தி உள்ளே போய்விட்டது. தலை சுற்றியது. கீழே விழுந்து விட்டேன். அந்தச் சிநேகத் துரோகி தப்பி ஓடி விட்டான்! மறுபடி நான் கண் விழித்து உணர்வு வந்து பார்த்தபோது ஓர் ஊமை ஸ்திரீயின் வீட்டில் இருந்ததைக் கண்டேன்......"

கந்தமாறனின் கற்பனைக் கதையைக் கேட்டு நந்தினி தன் மனதிற்குள்ளே சிரித்தாள். குந்தவை தேவிக்கு அதை எவ்வளவு தூரம் நம்புவது என்று தீர்மானிக்க முடியவில்லை.

"ஊமை ஸ்திரீயின் வீட்டுக்கு எப்படி வந்து சேர்ந்தீர்கள்? யார் கொண்டு சேர்த்தது?" என்றாள்.

"அதுதான் எனக்கும் விளங்காத மர்மமாகயிருக்கிறது. அந்த ஊமைக்கு ஒன்றுமே தெரியவில்லை. தெரிந்தாலும் சொல்ல முடியவில்லை. அவளுக்கு ஒரு புதல்வன் உண்டாம். அவனையும் அன்றிருந்து காணவே காணோம். எப்படி மாயமாய் மறைந்தான் என்று தெரியாது. அவன் திரும்பி வந்தால் ஒரு வேளை கேட்கலாம். இல்லாவிடில் பழுவூர் வீரர்கள் என் நண்பனைப் பிடிக்கும் வரையில் காத்திருக்க வேண்டியதுதான்!......"

"அவன் அகப்பட்டு விடுவான் என்று நினைக்கிறீர்களா?"

"அகப்படாமல் எப்படித் தப்ப முடியும்? சப்பட்டை கட்டிக்கொண்டு பறந்துவிட முடியாதல்லவா? அதற்காகவே, அவனைப் பார்ப்பதற்காகவே, இங்கே காத்திருக்கிறேன். இல்லாவிடில் ஊர் சென்றிருப்பேன். இன்னமும் அவனுக்காகப் பழுவூர் அரசர்களிடம் மன்னிப்புப் பெறலாம் என்ற நம்பிக்கை எனக்கு இருக்கிறது."

"ஐயா! தங்களுடைய பெருந்தன்மையே பெருந்தன்மை!" என்றாள் இளையபிராட்டி. அவளுடைய மனம் 'வந்தியத்தேவன் அகப்படக் கூடாது. அவன் துரோகியாயிருந்தாலும் சரிதான்!' என்று எண்ணமிட்டது.

அச்சமயத்தில் அரண்மனைத் தாதி ஒருத்தி ஓடி வந்து, "அம்மா! ஒற்றன் அகப்பட்டு விட்டான்! பிடித்து வருகிறார்கள்!" என்று கத்தினாள்.

நந்தினி குந்தவை இருவருடைய முகத்திலும் துன்ப வேதனை காணப்பட்டது. நந்தினி விரைவில் அதை மாற்றிக் கொண்டாள். குந்தவையினால் அது முடியவில்லை. (தொடரும்)




## எகிப்து—2

உலகத்தில் உள்ள எந்த நாட்டுக்கும் இல்லாத தனிச் சிறப்பு எகிப்துக்கு உண்டு. உலகத்தில் வேறு எந்தத் தேசத்தையும் காட்டிலும் எகிப்தின் சரித்திரம் தான் மிகப் பழமையானது. கிறிஸ்துவ சகாப்தம் ஆரம்பமாவதற்கு சுமார் மூவாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன் எகிப்து நாட்டின் சரித்திரம் முதன் முதலாக எழுதப்பட்டது. எகிப்து மிகவும் புராதனப் பெருமை வாய்ந்த தேசம் என்பதற்கு இதைக் காட்டிலும் வேறு என்ன ஆதாரம் வேண்டும்?

பண்டைய காலத்து எகிப்தியர்களின் கல்வெட்டுகளிலிருந்தும், ஞாபகச் சின்னங்களிலிருந்தும்தான் நவீன சரித்திராசிரியர்கள் புராதன எகிப்தின் வரலாறுகளைத் தெரிந்து கொண்டார்கள்.

1799-ம் ஆண்டில் நிகழ்ந்த ஒரு சம்பவம், பண்டைய எகிப்தியர்களின் வாழ்க்கையை அறிந்து கொள்வதில் புதிய ஆர்வத்தை உண்டாக்கியது. அந்த வருஷத்தில்தான் வீர நெப்போலியனின் ராணுவத்தைச் சேர்ந்த அதிகாரி ஒருவர், நைல் நதியின் முகத்துவாரத்தில் உள்ள ரோஸெட்டா என்ற இடத்திலிருந்து ஒரு அபூர்வமான கல்லைக் கண்டு பிடித்தார். அந்தக் கல்லில் மூன்று பாஷைகள் செதுக்கப்பட்டிருந்தன. அவற்றில் புராதன எகிப்திய பாஷையும் ஒன்று.

பண்டைய எகிப்திய பாஷை பல நூற்றாண்டுகள் வரையில் ஆராய்ச்சி நிபுணர்களுக்குக் கண்டு பிடிக்க முடியாத புதிராக இருந்து வந்தது. ஆனால் மேற்படி கல்வெட்டு அந்தப் புதிரை அவிழ்த்துப் பண்டைய எகிப்திய பாஷையின் மர்மத்தைத் தெளிவாக்கியது.

அந்தப் பிரசித்தி பெற்ற ரோஸெட்டா கல் பின்னர் இங்கிலாந்துக்கு எடுத்துச் செல்லப் பட்டது. இன்றும் அது பிரிட்டிஷ் காட்சிச் சாலையில் (மியூஸியம்) உள்ள சிறந்த பொக்கிஷங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது.

* * *

புராதன எகிப்தியர்கள் நிர்மாணித்த உலகப் பிரசித்தி பெற்ற ஞாபகச் சின்னங்கள், அவர்களுடைய விசித்திரமான பண்டைய பழக்க வழக்கங்களை அறிந்து கொள்வதற்கு உதவியாக இருக்கின்றன. ஜீவதசையுடன் இருக்கும்போது மனிதனுக்கு என்னென்ன சாதனங்கள் தேவையோ, அவையெல்லாம் எகிப்திய மன்னர்களின் கல்லறைகளில் வைக்கப்பட்டிருக்கின்றன. பிரிந்துபோன ஆத்மா மறுபடியும் ஒரு காலத்தில் அந்த தேகத்துக்குள் வந்து புகலாம் என்பது எகிப்தியர்களின் நம்பிக்கை! அத்தகைய நம்பிக்கை காரணமாக, பல பல ஆண்டுகளுக்கு முன் இறந்தவர்களின் உடல்கள் பாதுகாக்கப்பட்டு இன்றும் இருந்து வருகின்றன! மாண்டபோது உடல் எப்படி இருந்ததோ அதற்குச் சிறிதும் பழுது ஏற்படாமல் பாதுகாப்பதில் எகிப்தியர்களுக்கு ஈடானவர்கள் இந்த உலகில் யாருமே இல்லை!

தூதாங்கமன் என்ற பெயரைப் பலரும் கேள்விப்பட்டிருக்கலாம். தூதாங்கமன் கிறிஸ்து பிறப்பதற்கு ஆயிரத்து முந்நூற்றைம்பது வருஷங்களுக்கு முன் எகிப்தை ஆண்ட அரசன் ஆவான். அவன் இருபது வயது பூர்த்தியாவதற்கு முன்பே இறந்துவிட்டதால், அவனது ஆட்சியில் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த எவ்விதச் சம்பவமும் நிகழவில்லை. அப்படியிருந்தும், தூதாங்கமன் என்ற பெயர் உலகப் பிரசித்தி பெற்றிருப்பதற்குக் காரணம் என்ன என்பதைப் பார்க்கலாம்.

எகிப்திலே 1922-ம் வருஷத்தில் தூதாங்கமன் கல்லறை கண்டு பிடிக்கப்பட்டது.

அதிலிருந்துதான் அந்தப் பெயர் உலகப் பிரசித்தம் ஆயிற்று. பண்டைய எகிப்திய மன்னர்களின் கல்லறைகள் கொள்ளைக் காரர்களால் சூறையாடப் பட்டுவிட்டதால், அவர்களிடமிருந்து தப்பிய தூதாங்கமனின் கல்லறையிலிருந்து ஆராய்ச்சியாளர்கள் பண்டைய எகிப்து நாட்டைப் பற்றிய பல அபூர்வ விஷயங்களைத் தெரிந்து கொண்டார்கள். அந்தக் கல்லறையில் எகிப்து மன்னனின் சிம்மாசனம் உள்பட பல சாதனங்கள் இருந்தன. விலையுயர்ந்த அழகிய ஆபரணங்கள் ஏராளமாக இருந்தன. இவைகளும், தூதாங்கமனின் உடலும் இன்றும் கெய்ரோ காட்சிச் சாலையில் பத்திரமாக வைக்கப்பட்டிருக்கின்றன.

* * *

எகிப்து நாடு பல நூற்றாண்டுகள் வரையில் மாறி மாறிப் பல்வேறு மன்னர்களின் ஆட்சியில் இருந்தது. மேற்படி மன்னர்களின் ஜாப்தாவில் பல பெண் மணிகளும் உண்டு.

அக்காலத்தில் எகிப்து நாட்டை ஆட்சி புரிந்த ராணிகளுக்கு 'க்ளியோபாட்ரா' என்ற பெயர் வழங்கி வந்தது. அவர்களில் ஏழாவது க்ளியோபாட்ராதான் சரித்திரத்தில் அழியாத இடம் பெற்றவள்; ராஜ்யங்களையும், ஜூலியஸ் ஸீஸர் போன்ற சரித்திர மகா புருஷர்களையும் தன் இஷ்டப்படி ஆட்டி வைத்தவள்.

இந்த உலகத்திலே சரித்திரத்தின் போக்கை மாற்றிய ஒரு சில பெண்மணிகளில் க்ளியோ பாட்ராவும் ஒருவள் என்பதை ஒப்புக்கொள்ளாதவர்கள் இல்லை. இணையற்ற அழகும் அறிவும் வாய்க்கப் பெற்று, ராஜ்யங்களின் தலைவிதியை மாற்றிய க்ளியோபாட்ராவைக் கதாநாயகியாகக் கொண்டு, மகாகவி ஷேக்ஸ்பியர் முதல் பர்னார்ட்ஷா வரை இலக்கிய மேதாவிகள் நாடகம் எழுதியுள்ளனர்.

இறுதியாக, கிறிஸ்துவ சகாப்தம் ஆரம்பமாவதற்கு மூந்நூற்று முப்பது வருஷங்களுக்கு முன் மகா அலெக்ஸாண்டர் போர் புரிந்து அந்நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டார்.

கிறிஸ்துவ சகாப்தத்துக்கு முன் ஆறுவது நூற்றாண்டில், அதாவது புத்தர் காலத்தில் பாரசீகர்கள் எகிப்தைக் கைப்பற்றினார்கள். எனவே அந்த நாடு பல ஆண்டுகள் வரையில் நைல் நதியிலிருந்து சிந்து நதிவரையில் பரந்து கிடந்த பாரசீக சாம்ராஜ்யத்தின் ஒரு மாகாணமாக இருந்தது. பிறகு பாரசீகர்கள் அலெக்ஸாண்டரிடம் தோல்வியுற்றதால், எகிப்தில் அவரது ஆட்சி ஏற்பட்டது.

அலெக்ஸாண்டர் காலமான பிறகு அவருடைய சாம்ராஜ்யத்தை அவரது தளபதிகள் பங்கு போட்டுக் கொண்டார்கள். அதன்படி மேற்கு ஆசியா, பாரசீகம், மெஸொபொடேமியா முதலியவை ஸெலியூகஸின் ஆட்சியில் வந்தன. எகிப்து நாட்டில் டோல்மி என்பவரின் ஆதிக்கம் ஏற்பட்டது.

டோல்மியின் ஆட்சியில்தான் அலெக்ஸாண்டிரியா எகிப்தின் தலைநகராக இருந்து வந்தது. மகா அலெக்ஸாண்டரின் ஞாபகார்த்தமாகவே அதற்கு அலெக்ஸாண்டிரியா என்று பெயர் வழங்கலாயிற்று. அக் காலத்தில் அலெக்ஸாண்டிரியாவின் கீர்த்தி உலகம் முழுவதும் வியாபித்திருந்தது.

கலாச்சாரத் துறையிலும் வர்த்தகத் துறையிலும் புகழ் பெற்று விளங்கிய அலெக்ஸாண்டிரியாவில் இந்திய வியாபாரிகளின் காலனி இருந்ததாகத் தெரிகிறது. அது போலவே அக்காலத்தில் மலையாளப் பிரதேசத்தை அடுத்த கடற்கரையில் அலெக்ஸாண்டிரியா வர்த்தகர்கள் வந்து குடியேறினர். இதிலிருந்து அப்போது இந்தியாவுக்கும் எகிப்துக்கும் எவ்வளவு நெருங்கிய வர்த்தகத் தொடர்பு இருந்திருக்க வேண்டும் என்பதை யாரும் ஊகித்துக் கொள்ளலாம்.

டோல்மியின் ஆட்சிக் காலத்தில் எகிப்திலே செல்வம் கொழித்துக் கொண்டிருந்தது. மற்றும் அது சக்தியுடனும் செல்வாக்குடனும் விளங்கியது. க்ளியோபாட்ரா டோல்மி வம்சத்தினரின் வழியில் வந்தவள் என்பது குறிப்பிடத் தக்கதாகும். கிறிஸ்துவ சகாப்தம் ஆரம்பமாவதற்கு முப்பது ஆண்டுகளுக்கு முன் க்ளியோபாட்ரா காலமானள். அதன் பின் எகிப்து ரோமிய சாம்ராஜ்யத்தின் ஒரு மாகாணமாயிற்று.

கிறிஸ்து பிறந்து அறுநூற்று நாற்பத்தொன்று ஆண்டுகளுக்குப் பின் எகிப்தில் அராபியர்கள் படையெடுத்துத் தங்களுடைய வெற்றிக் கொடியை நாட்டினர். அதுவரையில் எகிப்தில் கிறிஸ்துவ மதமே வியாபித்திருந்தது.



எகிப்திய விவசாயி

# பட்டதாரி வேண்டும்!

சரோஜா ராமமூர்த்தி

கலகல வென்று சிரித்துக் கொண்டே சகுந்தலை வக்கீல் ஜகந்நாதத்தின் அறைக்குள் நுழைந்தாள். அவர் எதிரில் இருக்கும் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு மீண்டும் சிரிக்க ஆரம்பித்தாள். அந்த அறையில் ஏதோ அலுவலாக வந்து இன்னொரு நாற்காலியில் உட்கார்ந்திருந்த சங்கரனை அவள் துளிக்கூட லட்சியமே செய்யவில்லை. சங்கரனுகவே, "ஸார்! இன்னொரு சமயம் நான் வருகிறேன்" என்று கூறிவிட்டுச் சகுந்தலையைப் பார்க்கவும் அஞ்சியவனுக அந்த வீட்டைவிட்டு வெளியே போய்விட்டான்.

"என்ன குழந்தை இது? உன்னைப் பார்த்துப் பயந்து ஒரு ஆண்பிள்ளை ஓடி விட்டானே?" என்று சிரித்துக் கொண்டே கேட்டார் ஜகந்நாதம்.

"இது சொல்றதைக் கேட்டீங்களா?" என்று கேட்டுக் கொண்டே பார்வதியம்மாள்—ஜகந்நாதத்தின் மனைவி, உள்ளே வந்தாள்.

"பட்டம் பெருதவனை இது கல்யாணம் செஞ்சுக்காதாம். அப்படிச் செய்து கொண்டாலும் அவனோடு வாழாதாம்! என்ன தைரியம் பாத்தீர்களா இதுக்கு?" என்று ஆச்சரியப்பட்டாள் பார்வதியம்மாள்.

"இப்படித் தைரியமாக இருக்கிறது மாமிக்குப் பிடிக்கவில்லை, மாமா!" என்ருள் சகுந்தலை.

"அதுக்குச் சொல்லலை குழந்தை! நாம் நினைக்கிறபடியே எல்லாம் நிறைவேறிடுதான்னு அது சொல்லுது. அதுக்கு என்ன தெரியும்? நான் பட்டம் பெற்றவள். அதுக்கு நாலு எழுத்து வாசிக்கத் தெரியும். பள்ளிக்கூடத்து வாசற்படியே அது மிதித்ததில்லை" என்ருர் ஜகந்நாதம் தம் மனைவியைப் பற்றி.

"இப்படிப் பிடிவாதமாக இருந்தால் சகுந்தலைக்கு எப்போதான் கல்யாணம் ஆகிறதாம்?" என்று கவலையுடன் கேட்டாள் பார்வதியம்மாள்.

"நீயும், நானும் கவலைப்பட்டு என்ன பண்றது? தாத்தாவுக்கு ஒரு தினுசான பிடிவாதம். பேத்திக்கு ஒரு தினுசான பிடிவாதம்!" என்று உதட்டைப் பிதுக்கி விட்டு ஜகந்நாதம் மறுபடியும் தன் வேலையில் ஈடுபட்டார்.

"நான் வரேன், மாமா! காலேஜிலே ஒரு 'மீட்டிங்' இருக்கு. போகணும்" என்று கூறிவிட்டுச் சகுந்தலை வெளியே நின்று கொண்டிருந்த காரில் போய் ஏறிக் கொண்டாள்.

* * *

வக்கீல் ஜகந்நாதத்தின் அத்யந்த நண்பர் சதாசிவம். சதாசிவத்தின் அருமைப் பேத்திதான் சகுந்தலை. தாயில்லாத குழந்தை என்கிற ஒரே காரணத்துக்காகச் சதாசிவம் பேத்தியிடம் அளவுக்கு மீறிய சலுகை காண்பித்து விட்டார். யாரையும் லட்சியம் பண்ணுத ஒருவிதப் போக்கு, கலாசாலைப் பட்டத்தில் அளவுக்கு மீறிய மோகம், இதெல்லாம் சகுந்தலையிடம் விரும்ப முடியாத குணங்கள். மற்றபடி அவளைப்பற்றி ஒன்றும் சொல்ல முடியாது. இதன் காரணமாகச் சகுந்தலையின் மனத்தில் ஒரு பிடிவாதம் இருந்தது. குறைந்தது பி. ஏ. பட்டம் பெற்ற ஒருவனைத் தவிர வேறு எந்தக் காரணத்தாலும் பட்டம் பெறுதவனைக் கல்யாணம் செய்து கொள்வதில்லை என்பதுதான் அப்பிடிவாதம். அவள் இண்டர் இரண்டாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய வைராக்கியம் தாத்தாவுக்கு மிகவும் பிடித்திருந்தது. பேத்தியைப் போலவே அவரும் ஒரு பிடிவாதத்தில் நிலைத்து நிற்க ஆரப்பித்தார். பட்டம் பெற்றதற்குப் பதிலாக வரதக்ஷிணை ஆயிரக் கணக்கில் வாங்குபவர்களைக் கண்டால் அவருக்கு விஷமாக இருந்தது. 'கல்வியை விலை கூறுவது போல் அல்லவா இருக்கிறது இவர்களது செய்கை?' என்று தம் நண்பர்களுடன் வாதிப்பார் அவர்.

"சகுந்தலையைக் கல்யாணம் பண்ணிக் கொள்கிறவனுக்குக் காலணு கொடுக்க மாட்டேன்" என்று அடித்துப் பேசுவார், தம் அத்யந்த நண்பர் ஜகந்நாதத்தினிடம்.

"வரதக்ஷிணை என்று வாங்கவில்லை, ஐயா! மேல் படிப்புக்கு என்று கேட்கிருன் என்று வைத்துக் கொள்ளுங்களேன்" என்று ஒரு தடவை கேட்டார் ஜகந்நாதம்.

"எனக்கு இருக்கும் ஆஸ்தி யெல்லாம் குழந்தை பேருக்கு எழுதி வைத்து விடுகிறேன். ஆனல், எந்தப் படிப்புக்கென்றும் கல்யாணப் பிள்ளைக்கு ஒரு காசு தரமாட்டேன். ஆண் பிள்ளைதானே, ஐயா? தானுகச் சம்பாதிக்க வேண்டியவன் தானே?" என்று பதிலுக்குக் கோபமாகக் கேட்டார் சதாசிவம்.

சகுந்தலையைக் கல்யாணம் செய்து கொள்வதற்கென்று எவ்வளவோ பட்டதாரிகள் முன் வந்தார்கள். ஆனால், ஒவ்வொருவருக்கு ஒருவித ஆசை இருந்தது. வந்த வரன்களுள் ஒருவனுக்கு அமெரிக்கா போகவேண்டும் என்று விருப்பம் இருந்தது.

அந்த விருப்பத்தை அவன் தெரிவித்ததும் சதாசிவம், "ஓஹோ! தாராளமாகப் போங்கள். குழந்தையும் பி. ஏ. படிக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறாள். நீங்கள் திரும்பி வருவதற்குள் அவளுடைய படிப்பும் முடிந்துவிடும்" என்று கூறினார்.

"அது சரிதான். அந்தச் செலவை நீங்கள்தான் ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்று கொஞ்சம் வினயமாகவே கேட்டான் பட்டதாரி.

சகுந்தலைக்கும் 'ஐயோ பாவம்' என்று தான் இருந்தது.

சதாசிவம் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். "நான் ஒருவன் பணம் சேர்த்து வைத்திருக்கிறேன் என்று எப்படியப்பா உங்களுக்குத் தெரிந்திருக்கிறது? நீ அமெரிக்கா போக வேண்டுமானால் நான் பணம் கொடுக்க வேண்டுமா? இதோ பார், அப்பா! என் கொள்கையைச் சொல்லி விடுகிறேன். பிறகு அவள் பாடு. நான் என் கையால் ஒரு காசு தரமாட்டேன்" என்று கண்டிப்பாகத் தம் கொள்கையை வெளியிட்டார் சதாசிவம்.

பிறகு, அந்தப் பட்டதாரிக்கு அங்கே உட்கார்ந்திருக்கப் பைத்தியமா, என்ன? சகுந்தலைக்கு ஒரு பைத்தியக்காரத் தாத்தா இருப்பதாக அவன் கட்டிவிட்ட கதையை நம்பிக் கொஞ்ச காலம் சகுந்தலையின் கல்யாணப் பேச்சு ஓய்ந்து போயிருந்தது.

இம்மாதிரி சந்தர்ப்பம் ஒன்றில்தான் சகுந்தலை தனது தாத்தாவின் அத்யந்த நண்பரான ஜகந்நாதத்தின் வீட்டுக்கு வந்திருந்தாள். ஜகந்நாதத்தின் மனைவி பார்வதியம்மாளின் கர்நாடகமான பேச்சைக் கேட்டுச் சிரித்துவிட்டுப் போனாள்.

## 2

"ஆனாலும் இந்தக் கிழவருக்கு இவ்வளவு பிடிவாதம் வேண்டாம். பணத்தைத் தலையிலா கட்டிக் கொண்டு போகப் போகிறார்? பேத்திக் கென்று கொடுப்பதைக் கல்யாணப் பிள்ளைக்குக் கொடுத்தால் என்ன மூழ்கிப் போய்விடுமாம்?" என்று பார்வதியம்மாள் கிழவரின் மேல் பாய்ந்தாள்.

"இவ்வளவு சிறிய பெண்ணுக்கு மாத்திரம் பிடிவாதம் இருக்கலாமா? பட்டம் என்ன அவ்வளவு முக்கியமா? புத்திசாலித்தனம், அறிவு இவைதானே பிரதானம்? நம் சங்கரனை உனக்குத் தெரியுமா, பார்வதி? பிள்ளை மணி என்றால் மணிதான்" என்றார் ஜகந்நாதம்.

"தெரியாமல் என்ன? அன்றைக்குச் சகுந்தலை வந்திருந்த போது அவனும் இருந்தானே?" என்றாள் பார்வதியம்மாள்.

"பையன் மூந்நூறு ரூபாய் சம்பாதிக்கிறான். தெரியாத பாஷையில்லை. வியாபாரத்தில் நிபுணன். ஆயிரக் கணக்கில் சம்பளம் ஆகுமென்று அவன் கம்பெனி முதலாளியே என்னிடம் சொன்னார்."

பார்வதியம்மாள் சிறிது நேரம் யோசனையில் ஆழ்ந்தாள்.

"ஐயோ பாவம்! இந்தப் பெண்ணும் இப்படி அசடாக இருக்குமோ?" என்று பெருமூச் செறிந்தாள்.

உறவினர்களைவிடச் சில நண்பர்கள் தம் நண்பருடைய குடும்ப விஷயங்களில் மிகவும் அக்கறை காட்டுவதைப் பார்க்கிறோம். அதுவும் நெடுநாளைப் பழக்கமானால் நண்பருடைய சுக துக்கங்களைத் தம்முடையதாகவே பாவிக்கிறார்கள். வக்கீல் ஜகந்நாதம் சதாசிவத்தின் குடும்பத்துடன் நெருங்கிய தொடர்பு உடையவர். சதாசிவம் வாழ்க்கையில் ரொம்பவும் அதிர்ஷ்டமற்றவர். இளம் பிராயத்திலேயே மனைவியை இழந்தவர். அவள் வைத்து விட்டுப் போன அடையாளமாகத் தம் பெண்ணை அருமையுடன் வளர்த்தார். அவளும் தாயைப்



போலவே ஒரு பெண் குழந்தையை விட்டு விட்டுப் போய்விட்டாள்.

"என்ன பார்வதி! யோசனையில் மூழ்கி விட்டாய்?" என்று ஜகந்நாதம் சிறிது நேரம் தம்முடன் பேசாதிருந்த மனைவியைப் பார்த்துக் கேட்டார்.

"எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது! ஆயிரம் பொய் சொல்லி ஒரு தாலி கட்ட வேண்டும் என்பார்கள். என்னவோ சொல்லுவீங்களே 'சர்டிபிகேட்' என்று, அதையா வாங்கிப் பார்க்கப் போகிறது சகுந்தலை? பி. ஏ. படித்திருக்கிறான் என்று சொல்லுங்களேன். முன்னாடியே சங்கரனிடம் சொல்லி வைத்துவிட்டால் போச்சு" என்றாள் பார்வதியம்மாள்.

ஜகந்நாதத்துக்கும் அந்த யோசனை சரியென்றே தோன்றியது.

மறு நாள் பகல் தம் நண்பரைப் பார்த்து ஒரு வரன் இருப்பதாகத் தெரிவிக்க ஜகந்நாதம் புறப்பட்டுக் கொண்டிருந்தார். தெருவில் கார் ஒன்று வந்து நின்றது. அவர் சற்றும் எதிர்பாராத விதமாகச் சங்கரன் உள்ளே நுழைந்தான்.

"வா, சங்கரன்! உன்னைத்தான் எதிர்பார்த்துக் கொண்டே இருந்தேன்" என்றார் ஜகந்நாதம்.

"என்ன அப்படி முக்கியமான விஷயம்?" என்று கேட்டான் சங்கரன்.

"உனக்குக் கல்யாணம் செய்து வைத்து விடுவது என்று தீர்மானித்து விட்டேன்



ஒண்டியாக இருப்பது எனக்குக் கட்டோடு பிடிக்கவில்லை."

"கல்யாணத்துக்கு என்ன ஸார் அவசரம் இப்போது?" என்று சிரித்துக் கொண்டே கேட்டான் சங்கரன்.

"அவசரம் என்னவா? என்னைப்போல் கிழவனாகிய பிறகுதான் கல்யாணம் செய்து கொள்ளவேண்டும், இல்லையா?" என்று கேட்டார் ஜகந்நாதம்.

"அன்றைக்கு, ஒரு வாரத்துக்கு முந்தி, நீ இங்கே உட்கார்ந்திருந்த போது ஒரு பெண் வந்தாளே, அவளை உனக்குப் பிடிக்கிறதா?" என்று கேட்டார் ஜகந்நாதம்.

சங்கரனைக் கனவு லோகத்திலிருந்து தட்டி எழுப்பியதுபோல் இருந்தது சகுந்தலையின் சிரிப்பொலி.

"ஆமாம், ஆமாம்; கல கலவென்று அன்றைக்குச் சிரித்துக் கொண்டே வந்தாளே அந்தப் பெண்ணைத்தானே?" என்று கேட்டான் சங்கரன்.

"ஆமாம், அப்பா! அவளேதான். பெண்ணுக்கு அழகுக்குக் குறைச்சல் இல்லை. பணத்துக்கும் குறைவு இல்லை. பிடிவாதம்தான் அவளைக் கெடுக்கிறது."

"என்ன பிடிவாதம் அது? ஒரு வேளை கல்யாணம் வேண்டாம் என்கிற பிடிவாதமோ?" என்று ஆவலுடன் கேட்டான் சங்கரன்.

"அதெல்லாம் இல்லை. அவள் இப்போது காலேஜில் இண்டர் வகுப்பில் படிக்கிறாள். அவளுக்குப் பட்டதாரி ஒருவனைத்தான் கல்யாணம் செய்து கொள்ளுவதற்கு இஷ்டம்."

"பேஷாகச் செய்து கொள்ளட்டும். பட்டதாரிகள் வேண்டிய பேர் இருக்கிறார்களே!" என்று அசிரத்தையாகப் பதிலளித்தான் சங்கரன்.

"பட்டதாரிகள் ஆயிரக் கணக்கில் வரதக்ஷிணை கேட்கிறார்கள், அப்பா!"

"பணம்தான் இருக்கிறதே, ஸார்!" என்று சங்கரன் பொறுமை இழந்து சற்று உரக்கக் கூறினான்.

"அவள் தாத்தா அவளைவிடப் பிடிவாத குணமுடையவர். வரனுக்கு ஒரு காசு கொடுக்க மாட்டாராம் அவர்" என்று தம் நண்பருடைய கொள்கையைத் தெளிவாக விளக்கினார் அவர்.

கடைசியில் சங்கரன் ஒரு விதமாகப் பட்டதாரி வேஷம் போட ஒப்புக் கொண்டான். சகுந்தலையை இன்னொரு தரம் பார்க்கவேண்டும் என்கிற ஆவல்தான் அதற்கு முக்கியமான காரணம்.

உடனே இரண்டு பேரும் காரில் புறப்பட்டுச் சதாசிவத்தின் வீட்டுக்குப் போனார்கள். சதாசிவம் சாய்வு நாற்காலியில் அரைக் கண் தூக்கத்தில்

இருந்தார். சகுந்தலை அப்பொழுதுதான் ஸ்னானம் செய்து உலராத கூந்தலைப் பறக்கவிட்டுக் கொண்டு சோபாவில் சாய்ந்தபடி ஒரு நாவலைப் படித்துக் கொண்டிருந்தாள். வாசலில் கார் வந்து நின்ற சத்தம் கேட்டு "யார் அது?" என்று கேட்டுக் கொண்டே வாயிற்படி அருகில் வந்து நின்றாள்.

தன்னை வரவேற்கத் தேவ கன்னிகை ஒருத்தி வந்து நிற்பதாகவே தோன்றியது சங்கரனுக்கு.

"வாருங்கள், மாமா!" என்று சொல்லி விட்டு அவிழ்ந்திருந்த தன் கூந்தலை எடுத்து முடிந்து கொண்டே, "நீங்களும் வாருங்கள்" என்று சங்கரனைப் பார்த்துக் கூறினாள்.

"உன்னைப் பார்க்கத்தான் குழந்தை வந்துகொண்டே யிருக்கிறோம்" என்று ஜகந்நாதம் சுற்றி வளைக்காமல் தான் வந்த விஷயத்தைக் கூறினார். இதற்குள் சதாசிவம் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டு எழுந்தார். தன்னைப் பார்க்க வரன் வந்திருப்பதை அறிந்த சகுந்தலை உள்ளே போய்விட்டாள். சங்கரன் தான் பி. ஏ. படித்திருப்பதாக ஒப்புக் கொண் டான்! தனக்கு வரதக்ஷிணை என்று ஒரு காசும் வேண்டியதில்லை என்று தானாகவே வலுவில் சொல்லிவிட்டான்! இதை யெல் லாம் காமரா அறை ஜன்னல் வழியாகக் கேட்டுக்கொண்டிருந்த சகுந்தலையை ஜகந் நாதம் கூப்பிட்டார்.

"இங்கே வந்து உட்கார், அம்மா! படித்த பெண் என்று என்னோடு வாயடி அடிக்கிறாய்! இப்போது உள்ளே பதுங் கிக் கொள்கிறாயே? நீ பாடிக் கேட்க வேண்டும் என்று வந்திருக்கிறார் இவர்" என்றார்.

சகுந்தலை அடக்க வொடுக்கத்துடன் வந்து உட்கார்ந்து கொண்டாள். "எனக் குப் பாடவே தெரியாதே, மாமா! புது சாய்க் கேட்கிறீர்களே" என்றாள் வெட்கம் தொனிக்கும் குரலில்.

"கலகல வென்று சிரிக்கத் தெரியுமாக் கும்" என்னும் சொற்கள் சங்கரனை அறி யாமல் வந்துவிட்டன.

"குழந்தை! நீ நம் வீட்டுக்கு வந்த போது சிரித்ததைத்தான் சொல்கிறார்" என்றார் ஜகந்நாதம் சிரித்துக்கொண்டே.

சகுந்தலை ஆச்சரியத்துடன் சங்கரனை ஏறிட்டுப் பார்த்தாள். 'ஆமாம், நான் சிரித்துக்கொண்டே உள்ளே நுழைந்த போது இவர் அவசரமாக வெளியே எழுந்து போனாரல்லவா?' என்று நினைத் துக் கொண்டாள். பிரும்மனின் சிருஷ்டி விநோதப்படி இருவருடைய மனதிலும் ஆழம் காண முடியாத ஒருவித அன்பு அந்த விநாடியில் தோன்றியது.

3

கல்யாணம் என்னவோ நிச்சயம் ஆகி விட்டது. சங்கரன் மனம் மட்டும் நிம் மதி அடையவில்லை. ஒரு அபலைப் பெண்ணை ஏமாற்றுகிறோம் என்று அவன் மனச்சாட்சி அவனைத் துன்புறுத்திக் கொண்டே யிருந்தது. விளையாட்டாக இந்த ஜகந்நாதத்தின் பேச்சைக் கேட்டுப் போனது வினையாக முடிந்து விட்டால் என்ன செய்வது? என்று பயம் வேறு அவனைப் பிடித்துக் கொண்டது. ஏதோ தீர்மானத்துக்கு வந்தவன் போல் ஜகந் நாதத்தினிடம் சொல்லாமல் ஒரு தினம் சகுந்தலையின் வீட்டுக்குப் போனான் அவன். மாப்பிள்ளையாக வரப்போகும் பிள்ளை வந்ததை அறிந்த சதாசிவம் மரியாதை யுடன் வரவேற்றார் அவனை.

"எங்கே இவ்வளவு தூரம்? சகுந் தலையைப் பார்க்க வேண்டுமா?" என்று சற்று நாகரிகமாகவே கேட்டார் கிழவர்.

"இல்லை, இல்லை. உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல வந்தேன். உங்கள் பேத் தியை ஏமாற்றுவது எனக்குப் பிடிக்க வில்லை. நான் பட்டதாரி இல்லை."

சதாசிவத்துக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"எனக்கு உன்னைப் பார்த்ததுமே பிடித்து விட்டதப்பா! குழந்தை என்ன சொல்வாளோ தெரியவில்லையே? அந்த ஜகந்நாதம் என்ன இப்படி விளையாட்டுத் தனமாக ஏதாவது செய்கிறான்?" என்று நண்பரைக் கடிந்து கொண்டார் கிழவர்.

"சகுந்தலையைக் கூப்பிட்டுக் கேட்டு விடுங்கள். இப்பொழுதுகூட எனக்குப் பட்டதாரி ஆக இஷ்டம்தான். குடும்ப நிலைமை குறுக்கிடவே வேலைக்குப் போய் விட்டேன். இரண்டு வருஷ அவகாசம் கொடுத்தால் பட்டதாரி ஆகி விடலாம்" என்று தன் ஆசையைக் கூறினான் சங்கரன்.

"சகுந்தலை!" என்று தன் பேத்தியைக் கூப்பிட்டு, "சங்கரன் சொல்லியதைக் கேட் டாய் அல்லவா? உன் அபிப்பிராயத்தைச் சொல்லி விடம்மா" என்றார் சதாசிவம்.

"வேண்டாம், தாத்தா" என்றாள் சகுந் தலை தலை நிமிராமல்.

"என்ன வேண்டாம்? கல்யாணமா?"

"அவர் ஒன்றும் பரீக்ஷைக்குப் படிக்க வேண்டாம்!" என்று நாணம் கலந்த குரலில் சொன்னாள் சகுந்தலை.

இந்தச் சகுந்தலையும் காளிதாசனின் காவியத்தில் வரும் சகுந்தலையாகவே தோன்றினாள் சங்கரனுக்கு.




ஆசிரியர்: எஸ். கே. செட்டூர் மொழிபெயர்ப்பு: 'வாஞ்சி'

(சென்ற வாரத் தொடர்ச்சி)

போலீஸ்காரர்கள் ஓடுவதை ஒருவாறு கவனித்த பழனி, "என் குறி தப்பாது என்பது அவர்களுக்குத் தெரியும். அதனால்தான் இப்படித் தலைதெறிக்க ஓடுகிறார்கள்" என்று பெத்தாயியிடம் பெருமையாகக் கூறினான்.

போலீசாரோ ஜன்னலையும் கதவையும் குறி வைத்துச் சுட்டுக் கொண்டிருந்தனர். பழனி தன்னிடமிருந்த ஈட்டியினால் சுவரில் துவாரம் செய்து அதன் வழியாகக் குறி பார்த்துச் சுட்டான். அதே சமயம் வெளியில் யாரோ இருவொன்று அலறியதிலிருந்து பழனி வீண் பெருமை அடித்துக் கொள்பவன் அல்ல என்பதும், அவன் குறி தவறாது என்பதும் தெளிவாயின!

பழனி சுடுவதைக் கண்ட போலீசார் மேற்கொண்டு பின் தங்கி மரங்களிடையே ஒளிந்து கொண்டனர்.

சமையலறையை நோக்கிப் போலீசார் சுட்டதிலிருந்து அவர்கள் வீட்டைச் சூழ்ந்து கொண்டு வருகிறார்கள் என்பது பழனிக்குத் தெரிந்து விட்டது.

"போலீசார் ஒரு வேளை பின் புறமாக வீட்டுக்குள் நுழைந்து விடலாம். அங்கு ஏதாவது கதவு இருக்கிறதா?" என்று பரபரப்புடன் கேட்டான் பழனி.

"இல்லை" என்றாள் பெத்தாயி.

"நல்லது. இப்போது நான் சொல்வதைக் கவனித்துக் கேள். நான் அவர்களிடம் சரண் அடையப் போவதில்லை. இராத்திரி வரையில் நான் இவர்களைச் சமாளித்து விட்டால், இருளில் ஒரே பாய்ச்சலாக வெளியே பாய்ந்து மாயமாக மறைந்து விடுவேன். எனினும் அவர்கள் விடாமல் சுட்டுக் கொண்டே இருப்பார்களே, என்ன செய்வது?"

இவ்விதம் சொல்லி விட்டுப் பழனி மற்ற மூன்று புறங்களிலும் சுவர்களில் ஈட்டியால் துவாரங்கள் செய்தான். எனவே அவற்றின் வழியாகப் பழனிக்கு வெளியே நாலா புறத்திலும் என்ன நடக்கிறது என்பதைக் காண முடிந்தது. பழனியிடம் ஏராளமான தோட்டாக்கள் இருந்ததால் மரங்களின் நடுவே போலீசாரின் நடமாட்டம் தெரிந்த போதெல்லாம் அவன் குறி வைத்துச் சுட்டுக் கொண்டிருந்தான். இப்படியே நாள் முழுதும் பழனிக்கும் போலீசாருக்கும் பலப்பரீட்சை நடந்து கொண்டிருந்தது.

மாலை ஐந்து மணி அடித்தது. அப்போது வீட்டுக்கு எதிரே புன்னை மரத்துக்கு அப்பாலிருந்து ஒரு வெள்ளைக் கொடி தென்பட்டது. சுவர்களிலிருந்த துவாரங்களிலிருந்து பழனி, பெத்தாயி இருவரும் அந்தக் கொடியைக் கவனித்தனர்.



சாப்பிடுபவர்:—என்ன ஐயா, தினமும் இந்த அவல் கேசரிதானா? வேறு ஏதேனும் போடப்படாதா?

ஸர்வர்:—ஓ, பேஷாய்ப் போடலாம். உமியில் போடலாம்! வேண்டும் என்றால் போடச் சொல்லுகிறேன், ஸார்!

"இப்போது சுடாதே" என்று எச்சரித்தாள் பெத்தாயி.

"ஏதோ தந்திரம் செய்கின்றனர்" என்று முணுமுணுத்தான் பழனி.

வெள்ளைக் கொடியைக் கையில் பிடித்துக் கொண்டு வீட்டை நோக்கி முனியாண்டி மாத்திரம் வருவது அவர்களுக்குத் தெரிந்தது.

"கோழை! துரோகி!" என்று பழனி உறுமிக்கொண்டே, துவாரத்தின் வழியாக அவனைச் சுட யத்தனித்தான். ஆனால் பெத்தாயி துப்பாக்கியை அப்பால் தள்ளி அவன் சுடமுடியாமல் தடுத்து விட்டாள்.

"மடத்தனமாக உளறாதே. அவர் (முனியாண்டி) உன்னைக் காட்டிக் கொடுக்கவில்லை. அவர் இப்போதுதானே திரும்பி வந்தார். இதெல்லாம் அவருக்குத் தெரியவே தெரியாது" என்றாள் பெத்தாயி.

பழனி தயங்கினான். பெத்தாயி சொன்னதில் அவனுக்கு நம்பிக்கை ஏற்படவில்லை.

சுவர்த் துவாரத்தின் வழியாக, "உனக்கு என்ன வேண்டும்?" என்று கத்தினான் பழனி.

"நான் இப்போதுதான் திரும்பி வந்தேன். திரும்பி வந்ததும் வராததுமாக, உனக்கு என் வீட்டில் ஒளிந்து கொள்ள இடம் கொடுத்ததாகப் போலீசார் என்னைக் கைது செய்திருக்கிறார்கள். சரண் அடைந்து விடுவதுதான் நல்லது என்று உன்னிடம் கூறச் சொல்கிறார்கள். இல்லாவிட்டால் உன்னைச் சுட்டுக் கொன்று விடுவார்களாம். உன்னால் என் மனைவிக்கும் ஆபத்து ஏற்பட்டிருக்கிறது. அவளும் உள்ளே அகப்பட்டுக் கொண்டிருக்கிறாள்."

"பரண் மேலே வந்து அவளை அழைத்துக் கொண்டு போயேன். யார் வேண்டாம் என்றார்கள்" என்றான் பழனி.

"ஐயோ, இங்கே வராதீர்கள். நீங்கள் துரோகம் செய்து விட்டதாக இவன் நினைத்துக் கொண்டிருக்கிறான்" என்று பெத்தாயி உரக்கக் கத்தினாள். ஆனால் அவள் கூறியது முனியாண்டிக்குக் காது கேட்கவில்லை.

முனியாண்டி வெள்ளைக் கொடியைப் பிடித்துக் கொண்டே வீட்டுக்கு அருகில் சென்றான். பழனி முனியாண்டியைச் சுடாமல் இருப்பதற்காகப் பெத்தாயி அவனுடைய துப்பாக்கியைப் பிடித்துக் கொண்டாள். முனியாண்டி கதவைத் தட்டினான்.

"இது ஒரு தந்திரம். கதவைத் திறப்பதற்காக நான் கீழே இறங்கிச் சென்றால் போலீசார் பாய்ந்து வந்து என்னைப் பிடித்து விடுவார்கள். ஆகையால் நீயே கீழே சென்று கதவைத் திற" என்று பழனி பெத்தாயியிடம் கூறினான்.

இவ்வாறு கூறியபின் அவன் பரண் கதவைத் திறந்து, அவள் இறங்குவதற்காக ஏணியை எடுத்து வைத்தான். பெத்தாயியும் ஏணியில் வெகு வேகமாக இறங்கினாள்.

இதன் மத்தியில் பழனி சும்மா இருக்கவில்லை. "நான் இன்னும் மேலேதான் இருக்கிறேன். தோப்பிலிருந்து யாராவது வீட்டுக்கு அருகில் வந்தால் அவனுடைய உயிர் அதோ கதிதான்" என்று பழனி போலீசாரை நோக்கிக் கத்தினான்.

முனியாண்டி மாத்திரம் உள்ளே வருவதற்காகப் பெத்தாயி கதவைச் சிறிது திறந்தாள். முனியாண்டி உள்ளே நுழைந்ததும் மறுபடியும் சாத்திக் கொண்டு விட்டாள்.

ஏணி வைத்த இடத்திலேயே இருந்தது. அதைப் பரண் மேலே தூக்குவதற்காகப் பழனி அதன் மீது கையை வைத்துக் கொண்டிருந்தான்.

இச்சமயத்தில் முனியாண்டிக்கும் பழனிக்கும் வாக்குவாதம் ஆரம்பமாயிற்று. போலீசாரிடம் சரண் அடைந்து விடும்படி முனியாண்டி பழனிக்குப் புத்திமதி கூறினான். பழனியோ ஏளனமாகச் சிரித்தான்.

"நீ எப்போது அப்பா போலீஸ் உளவாளியாகவும் யோசனை சொல்லும் பாரிஸ்டராகவும் ஆனாய்?" என்று குறும்பாகக் கேட்டான் பழனி.

"எனக்கு ஒன்றுமே தெரியாது. நான் தோப்புக்குள் வந்ததுதான் தாமதம், அவர்கள் என்னைக் கைது செய்து விட்டார்கள்". என்று முனியாண்டி பரிதாபமாகக் கூறினான்.

"சரி, ஏணியில் ஏறிப் பரண்மேலே வா, பேசிக் கொள்ளலாம்."

"அப்படியே வருகிறேன்" என்று கூறி முனியாண்டி ஏணியில் ஏற ஆரம்பித்தான்.

பெத்தாயி அவனைத் தடுத்தாள். "மேலே போகாதீர்கள். அவன் உங்களைக் கொன்று விடுவான்" என்று பதறினாள் பெத்தாயி.

"அவன் கை வரிசையைக் காட்டட்டும். பார்க்கலாம். என்னை நான் பாதுகாத்துக் கொள்ள முடியும்" என்று சொல்லிக் கொண்டே முனியாண்டி ஏணியின் வழியாக மேலே ஏறினான்.

பழனிக்கு உள்ளூற ஆத்திரம் பொங்கியது. அவன் முகத்தில் கோரமான புன்னகை தாண்டவமாடியது. முனியாண்டியின் தலை பரணுக்கு மேலே வந்ததும் பழனி ஓர் அரிவாளால் முனியாண்டியின் தலையில் ஓங்கி ஒரு வெட்டு வெட்டினான்.

அவ்வளவுதான்! இரத்தம் பீறிட்டு அடித்தது. முனியாண்டி 'ஹா' என்று அலறிக் கொண்டே ஏணியிலிருந்து 'தொப்'பென்று கீழே விழுந்தான்.

கீழே விழுந்ததைக் கண்டு பெத்தாயி கதறினாள். பழனியைக் கண்டபடி திட்டினாள். சபித்தாள். முனியாண்டியை இழுத்துக் கொண்டு கதவைத் திறந்து வெளியே சென்றாள்! "ஐயோ! உதவிக்கு வாருங்கள், உதவிக்கு வாருங்கள்" என்று கூக்குரலிட்டாள். யாரும் உதவிக்கு வராததால் முனியாண்டியை இழுத்துக் கொண்டு, வீட்டை அடுத்துள்ள இடை வெளியைத் தாண்டி தோப்புக்குள் சென்றாள்.

இச்சந்தர்ப்பத்தில் பழனியும் வெகு மும்முரமாகத் தன்னுடைய போர் அலுவல்களைக் கவனிக்கலானான்.

பெத்தாயி வெளியே சென்றதும் அவன் ஒரே பாய்ச்சலில் ஏணியின் வழியாகக் கீழே இறங்கினான். வாசற் கதவைத் தாளிட்டான். மீண்டும் திரும்பி வந்து பரண் மீதேறி ஏணியை மேலே இழுத்துப் பரணில் போட்டான். அதன்பின் ஒரு விநாடியும் தாமதமின்றிப் பரண் கதவைச் சாத்தி விட்டுப் போரைத் தொடரலானான்!



வந்தவர் :— நீங்கள் சின்ன வயசிலே காலேஜுக்குப் போனது உண்டா?

பிரமுகர் :—எதற்கும் நான் என் காரியதரிசியைத்தான் அனுப்புவது வழக்கம் என்று உமக்கு அப்பவே சொல்லிவிட்டேனே, சும்மா கேட்கிறீர்களே!

சூரியன் மறைந்து உலகை இருள் சூழ்ந்து கொள்ள ஆரம்பித்தது. இரவு வந்ததும் தன் பாடு கொண்டாட்டம்தான், குடிசையிலிருந்து பாய்ந்து தோப்புக்குள் ஓடி மறைந்து விடலாம் என்று நினைத்திருந்த பழனியின் எண்ணத்தில் மண் விழுந்தது.

ஏனெனில் போலீசார் தோப்பைச் சுற்றி நாலாபுறத்திலும் தீ மூட்டி விட்டார்கள். எனவே அவர்களுக்குத் தெரியாமல் யாரும் குடிசையிலிருந்து தோப்புக்கு ஓட முடியாமற் போயிற்று. இதைத் தவிர போலீசார் தங்களுடைய 'டார்ச்' விளக்குகளையும் அடிக்கடி போட்டுக் கண்காணித்து வந்தார்கள்.

பழனி இடைவெளி கிடைத்தபோது சட்டென்று கீழே இறங்கி வந்தான். உணவு, தண்ணீர் முதலியவற்றை எடுத்துக் கொண்டு மறுபடியும் பரண்மீது ஏறி, நீண்ட நேர முற்றுகையைச் சமாளிப்பதற்குத் தயாரானான்.

போலீசார் அவசரப்பட்டுக் கொண்டு குடிசையை நெருக்க விரும்பவில்லை. அவ்வாறு செய்யும் பட்சத்தில் தங்களிடையே யிருந்த சேதம் ஏற்படும் என்பது அவர்களுக்குத் தெரியும். மறுநாள் பகலில் அவன் தங்கள் கையில் சிக்கிக் கொண்டுதானே தீர வேண்டும் என்று அவர்கள் நினைத்தனர்.

பழனி தன் முழங்கால்களில் துப்பாக்கியை வைத்துக் கொண்டே அப்போதைக்கப்போது சிறிது நேரம் தூங்கி விழித்தான். விழித்துக் கொண்ட போதெல்லாம் துவா

ரத்தின் வழியாக எட்டிப் பார்த்து வந்தான். வீட்டைச் சுற்றி எல்லாம் அமைதியாக இருந்தது. ஆனால் தோப்பில் இன்னும் தீ எரிந்து கொண்டிருந்தது. எனவே அவன் தப்பி ஓடுவதற்கு வழியில்லை. இறுதியாகப் பழனி அயர்ந்த தூக்கத்தில் ஆழ்ந்தான்.

காலையில் சுமார் ஆறு மணி இருக்கும். பழனி தூக்கம் தெளிந்து எழுந்தான். சுவர் துவாரங்களின் வழியாக பரணுக்குள் சூரிய வெளிச்சம் அடித்தது. மெதுவாக அவன் பரண் கதவைத் திறந்து கொண்டு கீழே பார்த்தான். வாசற் கதவு தாளிடப்பட்டவாறே இருந்தது. இதன் மத்தியில் அதிக போலீஸ் படை வந்து சேர்ந்தது. உதவி போலீஸ் சூபரின்டெண்டும் சர்க்கிள் இன்ஸ்பெக்டரும் வந்து சேர்ந்தனர். அவர்களின் 'யுத்த சபை' நடந்தது.

உதவி சூபரின்டெண்டுதான் புதிய போர்த் திட்டத்தைத் தயாரித்தார். வாசற் கதவைத் தாக்குவதுபோல் போலீசார் பாசாங்கு செய்யவே பழனி அந்தப் புறத்தில் தனது கவனத்தைச் செலுத்தினான். ஆனால் அதே சமயம் இரண்டு கான்ஸ்டேபிள்கள் பின்புறமாகச் சென்று, சமையலறை ஜன்னலின் வழியாக வீட்டின் மேல் தளத்துக்குச் சென்றார்கள். அங்கே அவர்கள் பழனியின் துப்பாக்கிக்குப் பயப்பட வேண்டியதில்லை அல்லவா? மேல் தளத்திலிருந்து மண்ணும் சிமெண்டும் பரணில் விழுந்தபோதுதான் மேலே போலீஸ் ஆட்கள் வந்திருக்கிறார்கள் என்பது பழனிக்குத் தெரிந்தது. மேலே இருந்த இரண்டு கான்ஸ்டேபிள்களும் மேல் தளத்திலிருந்து துவாரம் செய்து கொண்டிருந்தார்கள். துவாரங்கள் ஓரளவு பெரிதாகத் தோண்டப்பட்டதும் அவர்கள் தங்களுடைய துப்பாக்கிகளை அவற்றில் பொருத்தி அறையை நோக்கிச் சுட ஆரம்பித்தார்கள்.

அவர்களின் குறி தவறிவிட்டதெனினும், பழனிக்கு வியர்வை கொட்டத் தொடங்கியது. இனி அதிக நேரம் தான் சமாளிக்க முடியாது என்று கலங்கினான். வலையில் அகப்பட்டுக் கொண்ட முயலைச் சுடுவது போல் தன்னைச் சுட்டுத் தள்ளி விடுவார்கள் என்று அவன் எண்ணினான்.

இருந்தாலும் அவன் துணிச்சல் குன்றவில்லை. அந்த ஆபத்தான சமயத்திலும் எப்படித் தப்பலாம் என்று அவனுடைய மூளை அதி தீவிரமாக வேலை செய்தது.



அங்கிருந்த கயிறுகளை யெல்லாம் ஒன்றாகச் சேர்த்துக் கட்டினான். மேலே தளத்தில் சில ஆணிகளை அடித்தான். அவற்றில் கயிற்றைக் கட்டி, கயிற்றுத் தொட்டில் போல் தொங்கவிட்டான். பின்னர் அதன் மீதேறி வௌவாலைப் போல் சுவரோடு சுவராக மேல் தளத்தில் ஒட்டிக் கொண்டான். போலீசார் சுடுவது அறையின் கீழ்ப்புறத்தைத் தானே தாக்கும். இருந்தாலும் போலீசார் துவாரங்களை இன்னும் அகலமாகச் செய்துவிட்டால் ....

அவன் நினைத்தது போலவே போலீசார் துவாரத்தை அகலமாக்கிக் கொண்டிருந்தனர். அது இன்னும் அகலமாகி விட்டால், பரண் கதவின் வழியாகக் கூட பழனிக்குக் கீழே குதிக்க முடியாமற் போய்விடும்.

எனவே பழனி மேல் தளத்தில் போலீசார் செய்த துவாரத்தின் வழியாகத் திடீரென்று ஒரு தடவை சுட்டான். பரண் கதவைத் திறந்து ஏணியை வைத்தான். அதன் வழியாகக் கீழே அதிவேகமாக இறங்கினான். ஏணியைக் கீழே தள்ளி விட்டுப் பரண் கதவைச் சாத்திவிட்டான். இதெல்லாம் கண்ணிமை கொட்டும் நேரத்தில் நடந்து விட்டன!

பழனி அவ்வாறு கீழே இறங்கி வந்தாலும் வரலாம் என்று ஊகித்த சப் இன்ஸ்பெக்டர் ஏற்கனவே ஜன்னலுக்கு அருகில் வந்து காத்துக் கொண்டிருந்தார். எனவே பழனி கீழே குதித்ததும் இன்ஸ்பெக்டரின் துப்பாக்கியிலிருந்து கிளம்பிய தோட்டா பழனியின் கையில் வந்து பாய்ந்தது.

பழனி உடனே திரும்பி ஜன்னலை நோக்கிச் சுட்டுவிட்டுச் சமையல் அறைக்குள் ஓடினான். சப் இன்ஸ்பெக்டர் ஒதுங்கிக் கொண்டதால் பழனி சுட்டது வீணாக அவருக்கு எவ்விதக் காயமும் ஏற்படவில்லை.

சமையலறைக்குள் சென்ற பழனி தன் அரிவாளை எடுத்துத் தன் கழுத்தையே ஓங்கி வெட்டிக் கொண்டான். "வீரன் பழனியைக் கொல்லும் வல்லமை இந்த உலகத்திலே யாருக்கும் இல்லை. பழனி தன் கையினாலேயே சாகிறான்" என்று கூக்குரலிட்டுக் கொண்டே கீழே சாய்ந்தான்.

★

பழனியாண்டி, பழனி இருவரையும் போலீசார் விலங்கிட்டுச் சமீபத்திலிருந்த கிராம ஆஸ்பத்திரிக்கு அனுப்பினர்.



இருபத்தெட்டு மணி நேரம் போலீசாருடன் போர் செய்து, அவர்களைத் திணற அடித்த பழனியைப் பார்ப்பதற்காக, பல மைல்கள் தூரத்திலிருக்கும் நூற்றுக்கணக்கான கிராமவாசிகள் சாரி சாரியாக வந்து கொண்டிருந்தார்கள்.

தன்னைக் காட்டிக் கொடுத்தவன் முனியாண்டிதான் என்ற விசித்திர எண்ணம் பழனியின் மனதை விட்டு அகலவில்லை.

"நான் வெளியே வந்த பின் பார்! பழனியிடம் விளையாடுவது நிச்சயம் ஆபத்தாகவே முடியும் என்பதை அந்தத் துரோகிப் பயலுக்குக் கற்பிக்கிறேன்" என்று பழனி மீசையை முறுக்கிக் கொண்டே வார்டரிடம் சவால் கூறினான்.

அதே சமயம் மண்டையில் கடுமையான காயத்துடன் மற்றொரு அறையில் படுத்திருந்த முனியாண்டியும் பழனி மீது தன் ஆத்திரத்தைக் கொட்டினான். முனியாண்டி மிகவும் பலசாலியான தாலேயே பழனியினால் ஏற்பட்ட வெட்டுக் காயத்துக்குப் பலியாகாமல் உயிர் தப்ப முடிந்தது.

"நான் வெளியில் வந்த பின் பெரிய காட்டு மிராண்டியான இந்தப் பழனிப் பயலுக்கு வாழைக்காய்களை எப்படி வெட்டுவது என்பது பற்றிச் சரியான பாடம் கற்பிக்கிறேன்! என் வீட்டில் அவனுக்கு அடைக்கலம் கொடுத்தேன். என் மனைவியை அவனது பாதுகாப்பில் விட்டுச் சென்றேன். அதற்குப் பிரதியாக அந்தப் பாவி செய்தது என்ன? என் மண்டையைப் பிளந்தான். இந்த உலகத்தில் நன்றி என்று சொல்லுகிறார்களே, அது இதுதான் போலும்!"

எழுந்திருக்கச் சக்தியற்று, வேதனையினாலும் கோபத்தினாலும் துடிக்கும் காயமடைந்த சிங்கத்தைப் போல் முனியாண்டி மேற்கண்டவாறு கர்ஜித்தான்.

அவன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த பெத்தாயி அவனுக்கு ஆறுதல் கூறினாள்.

"முதலில் உங்களுக்கு உடம்பு நன்றாக ஆகட்டும். அடுத்த தடவை அவனை எடுத்த எடுப்பில் கோடாரியால் வெட்டி விட வேண்டும் என்பதை மாத்திரம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். இன்னொரு விஷயமும் சொல்லி வைக்கிறேன். இனி சண்டை ஏற்படும்போது ஏணியின் மீது ஏறாதீர்கள். ஏணிகள் எப்போதுமே துரோகத்தைக் கொடுப்பவை" என்றாள் பெத்தாயி!

# படித்துப் பாருங்கள்!

## பிள்ளைத் தமிழ்

குழந்தைப் பருவத்து விளையாட்டுக்களை எல்லா மொழிப் புலவர்களும் பெரிதும் அனுபவித்துத்தான் பாடியிருக்கிறார்கள். ஆனாலும் அவர்கள் தமிழ்ப் புலவர்களைப் போல் அவ்வளவு அனுபவித்திருக்க முடியாது. குழந்தைப் பருவத்தைப் பத்து பகுதியாகப் பிரித்து எத்தனை பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தங்கள் செய்திருக்கிறார்கள்! இப்பொழுது சரஸ்வதி மகால் புத்தக சாலைக் கமிட்டியார், திருப்பெருந்துறை சிவயோக நாயகி பிள்ளைத் தமிழ், தாங்கை வீர வேலாயுதசாமி பிள்ளைத் தமிழ், திருவாரூர் சத்திய ஞான பண்டாரம் பிள்ளைத் தமிழ் என்ற மூன்று பிரபந்தங்களை ஒரு புஸ்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள். விலை: ரூ. 2—8—0.

## மூன்று நாடகங்கள்

இயல், இசை, நாடகம்—என்னும் முத்தமிழுள் நாடகம் பண்டைக் காலத்தில் எப்படியிருந்தது என்பதை இப்போது யாரும் கலபமாக அறிந்து கொள்ளுவதற்கில்லை. சில நூல்கள் இருந்து மறைந்திருக்க வேண்டும். அத்தகைய நூல்கள் கிடைக்காத காரணத்தினாலேயே நம் நாட்டில் முற்காலத்தில் கூத்துக்கள் நடைபெறவில்லை என்று சொல்லி விடக் கூடாது.

நம் நாட்டுப் பழைய இலக்கியங்களுக்கு ஒரு பாதுகாப்புக் கோட்டையாக விளங்கும் தஞ்சை சரபோஜிமகாராஜர் சரஸ்வதி மகாலில் ஏட்டுச் சுவடிகளில் பழைய நாடகங்கள் மூன்றின் பிரதிகள் கிடைத்தன.

மதன சுந்தரப் பிரசாத சந்தான விலாசம், பாண்டிய கேளி விலாச நாடகம், புரூரவ நாடகம் என்னும் மூன்று நாடகங்களும் ஆராய்ந்து, ஆராயப் பட்டு, நல்ல பதிப்பாக வெளி வந்திருக்கிறது. மூன்றாவது நாடகம் பூர்த்தியாகக் கிடைக்கவில்லை. ஆனாலும் கிடைத்தவரையில் லாபம் அல்லவா!

பிரகரம்: சரஸ்வதி மகால் வெளியீடு, தஞ்சை; விலை ரூ. 2—4—0,

## வானமும் புவனமும்

வானத்தில் பல்லாயிரக் கணக்கான நட்சத்திரங்கள் இருக்கின்றன. பல கிரகங்கள் இருக்கின்றன. அவற்றின் சரித்திரம் மிகவும் ருசிகரமானது. அப்படியே பூமியிலுள்ள ஜீவராசிகளைப் பற்றிய சரித்திரமும் மிகவும் சுவாரஸ்யமாக இருக்கும். இவற்றின் சுவை குன்றாமல் தெள்ளத் தெளிந்த தமிழில் வெகு அழகாக எழுதியிருக்கிறார் இந் நூலாசிரியர் ஸ்ரீ எம். கிருஷ்ணஸ்வாமி, எம். ஏ., எல். டி.

பிரகரம்: டி. ஜி. கோபால் பிள்ளை, 2-27, பிராட்வே, சென்னை. விலை: ரூ. 2.

பாப்பா மலர்

# பாபு தப்பினான்!

-சாமா

★ ★ ★

பாபுவுக்கு ஏழு வயது இருக்கும். ரொம்பவும் துடுக்காகவும் கருகருப்பாகவும் இருப்பான். எந்த நெருக்கடியான நிலைமையிலும் தன் சமயோசித புத்தியினால் பாபு சமாளித்து விடுவான். ஒரு நாள் தகப்பனார் பாபுவிடம் பணம் கொடுத்து மாம்பழம் வாங்கிவரச் சொன்னார். கடைக்குப் போகும் வழியில் ஒரு மாந்தோட்டம் இருந்தது. தோட்டத்தில் புகுந்து குறுக்கு வழியாகப் போகலாம் என்று துணிந்தான் பாபு.

பாபு அன்று கலர் சொக்காய் அணிந்து இருந்தான். அவனுடைய கலர் சொக்காயைப் பார்த்தால் யாரும் மிரண்டு விடுவார்கள். அப்படி இருக்க அங்கு நின்று கொண்டிருந்த காளை மாடு சும்மாவா இருக்கும்? அதுவோ கலர் சொக்காயைக் கண்டு மிரண்டு எவ்வளவோ நாளாகி விட்டது. கொஞ்சம் மிரண்டுதான் பார்க்கலாமே என்று மிரண்டு ஒரு துள்ளுத் துள்ளியது.

பாபு நடுங்கிப் போய் ஓட ஆரம்பித்தான். மாடும் துரத்தியது. ஓடி, ஓடி அவன் மூச்சுத் திணறியது. அப்பொழுது அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. சொக்காயைக் கழற்றி அதனிடம் விட்டெறிந்து விட்டால் அது தன்னை விட்டுவிடும் என்று நினைத்தான். ஆனால் சொக்காயை நின்று கழற்ற அவனுக்கு நேரம் எங்கே இருக்கிறது? அவன்தான் அங்கும் இங்குமாக ஓடுகிறானே! பாபுவுக்குப் பக்கத்தில் இரண்டு மரங்கள் ஒன்றுக்கொன்று 1½ அடி தூரத்தில் இருப்பதைக் கண்டான். அவனுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. 'சபாஷ்! இதுதான் சரி' என்று இரண்டு மரங்களுக்கும் நடுவே ஓடி நின்று எதிர்த்தாற் போல் ஓடிவரும் மாட்டிற்குப் பாய்ச்சல் காட்டினான்.

மாடு அவனை நோக்கி மரத்திற்கு நடுவே பாய்ந்தது. பாபு சட்டென்று பக்கவாட்டில் நகர்ந்தான். அவ்வளவுதான் பாபுவின் யோசனை பலித்தது. மாடு வந்த வேகத்தில் நன்றாக இரண்டு மரங்களுக்கும் நடுவே மாட்டிக் கொண்டது. மாடு மோதின வேகத்தில் மரங்களே சமயோசித யோசனைக்குப் பரிசாகப் பழங்களை உதிர்த்தன. பாபு ஆனந்தத்தில் பழங்களைப் பொறுக்கிக் கொண்டு வீட்டுக்கு ஓடினான்.



# கிணற்றுத் தேவதை

ரா.நா.

## 3. இளவரசனின் பிரிவு

கமரல்ஸமானும் பகதூராவும் சீன அரசனிடமும், ராணியிடமும் விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டார்கள். அவர்களுடன் ஏராளமான போர் வீரர்களும் பணியாட்களும் சென்றனர்.

ஒரு மாதகாலம் பிரயாணம் செய்த பிறகு அவர்கள் ஒரு சமவெளிப் பிரதேசத்திற்கு வந்து சேர்ந்தனர். அந்தச் சமவெளியில் சில உயர்ந்த மரங்கள் இருந்தன. வெய்யில் மிகவும் கடுமையாக இருந்ததனால் அவர்கள் மரங்களின் நிழலில் கூடாரத்தை அடித்துக் கொண்டு அங்கே தங்கினர். பகதூரா மிகவும் களைப்புற்றிருந்ததால் கூடாரத்தில் நுழைந்ததும் படுத்து நன்றாகத் தூங்கி விட்டாள்.

பகதூரா கூடாரத்திற்குள் சென்ற சில நிமிஷங்களுக்கெல்லாம் இளவரசன் கமரல்ஸமான் உள்ளே நுழைந்தான். நுழைந்ததும் தன் காதலியின் படுக்கையருகில் பளபளவென ஒரு நகை மின்னுவதைக் கண்டான். உடனே அதை எடுத்துக்கொண்டு கூடாரத்திற்கு வெளியே சென்று வெளிச்சத்தில் நன்றாகக் கவனித்துப் பார்த்தான். அது ஒரு மந்திரக் கவசம் என்றும் தன் மகளுக்குத் தீங்கு நேரிடாமல் காப்பதற்காக பகதூராவுக்கு அவள் தாயார் அளித்த பரிசு என்றும் அறிந்தான். அந்தக் கவசத்தின் வேலைப்பாட்டைக் கண்டு கமரல்ஸமான் கவனித்துக் கொண்டிருக்கையில் திடீரென ஒரு பறவை பறந்து வந்து அதைக் கொத்திக் கொண்டு பறந்தோடி விட்டது.

கமரல்ஸமானுக்குத் துக்கம் தாங்கவில்லை. தனது காதலி அருமையாகக் கருதும் கவசத்தை இழந்தது கேட்டால் அவள் மிக துக்கமடைவாள் என நினைத்து இளவரசன் மேலும் அதிக வருத்தமடைந்தான். எப்படியாவது அதைத் திரும்பப் பெற எண்ணி அந்தப் பறவையைத் துரத்திக்கொண்டு ஓடினான். பறவை நிற்காமல் பறந்துகொண்டே யிருந்தது. இளவரசன் கமரல்ஸமானும் கொஞ்சமும் சளைக்காமல் ஓடினான். ஆனால் வரவர அவனால் ஓட முடியவில்லை. கவசத்தைப் பெற வேண்டுமானால் பறவையோடு ஓடித்தானே யாகவேண்டும்? இப்படி ஓடிக்கொண்டிருக்கையில் இருட்டி விட்டது. அச் சமயம் அந்தத் திருட்டுப் பறவை கவசத்தை விழுங்கி விட்டு ஒரு மரத்தின் மீது உட்கார்ந்தது.

எப்படியாவது கவசத்தைத் திரும்பப் பெறுவது என்று உறுதிகொண்டு இளவரசன் மரத்தடியில் படுத்தான். ஓடிய களைப்பால் சில நிமிஷங்களுக்கெல்லாம் தூங்கிவிட்டான்.

காலையில் எழுந்து பறவை பறக்குமிடமெல்லாம் ஓடினான். இவ்வாறு பத்து நாட்கள் பிரயாணம் செய்தான். வழியில் அகப்பட்ட காய் கிழங்குகளை உண்டு, பறவை தங்கும் சமயம் அதே மரத்தடியில் படுத்து உறங்கிக் காலங் கழித்தான். இவ்வாறு பகதூராவை விட்டுப் பிரிந்து வெகு தூரம் வந்துவிட்டான். உலகில் தான் எந்த பாகத்தில்தான் இருக்கிறோம் என்பது இளவரசனுக்குத் தெரியவில்லை.

பதினோராவது நாள் ஒரு நூதன நகரத்திலுள்ள கடற்கரைக்கு வந்து சேர்ந்தான். இங்கே அந்த மாயப் பறவை ஒரு மதிலைத் தாண்டிப் பறந்து விட்டது. மதில் மிகவும் உயரமாயிருந்ததால் அதைத் தாண்டிப் பறவை எங்கு பறந்தோடிற்று என்பது அவனுக்குத் தெரியவில்லை. தான் தேடி வந்த பறவையும் மறைந்த பிறகு என்ன செய்வதெனக் கமரல்ஸமானுக்குத் தெரியவில்லை. அந்த நூதன நகரத்திற்குள் நுழைந்து தெருத் தெருவாக நடந்தான். இவ்வாறு போகும் பொழுது ஒரு தோட்டத்தில் ஒரு கிழவன் செடிகள் பயிர் செய்துகொண்டிருப்பதைக் கண்டான். அவனைக் கண்டதும் கமரல்ஸமானுக்கு ஒரு தைரியம் பிறந்தது. முன்பின் பார்த்து அறியாத ஒரு புதிய ஊரில் ஒரு நல்ல மனிதன் கிடைத்தான் என்று நினைத்துச் சந்தோஷமடைந்தான்.

இளவரசனைக் கண்டதும் கிழவன் உள்ளே வரும்படி அழைத்தான். அந்த ஊர் ஜனங்கள் கொடியவர்கள் என்றும், அன்னியரைக் கொன்று விடுவர் என்றும் கூறி ஆனால் தான் அவனைக் காப்பாற்றுவதாகவும் கிழவன் வாக்களித்தான்.

கமரல்ஸமான் கிழவனுக்கு நன்றி செலுத்தி விட்டு அவன் அளித்த உணவை உட்கொண்டான். சற்றுக் களைப்பாறியவுடன் இளவரசன் தனது கதையைக் கிழவனுக்குக் கூறி விட்டு "பெரியவரே! இனி என் காதலி யிருக்குமிடத்தைக் கண்டு பிடிப்பது கஷ்டம். எனது தாய்

நாடான கமீடானுக்கு எப்படிச் செல்வது எனத் தாங்கள் வழி சொல்வீர்களானால் அங்கே என் தந்தை ஷாஸ்மானின் உதவியைக் கொண்டு என் காதலியைக் கண்டு பிடிப்பேன்" என்று வேண்டிக் கொண்டான்.

இளவரசனின் வேண்டுகோளைக் கேட்டுக் கிழவன் மனமிரங்கினான். சற்று யோசனை செய்து விட்டுக் கிழவன் கூறினான்: "இளவரசே! இங்கிருந்து கமீடானுக்குச் செல்வதாயிருந்தால் ஒரு வருஷம் பிடிக்கும். ஆனால் இங்கிருந்து இபனிக்குச் சென்றால் அங்கிருந்து கமீடானுக்குச் சீக்கிரம் சென்று விடலாம். ஆனால் இபனிக்கு வருஷத்திற்கு ஒரு கப்பல்தான் புறப்படுகிறது. இவ்வருஷம் செல்ல வேண்டிய கப்பல் சில நாட்களுக்கு முன் தான் புறப்பட்டுச் சென்றது. இனி ஒரு வருஷம் காத்திருந்தால்தான் உங்கள் நாட்டிற்குச் செல்லலாம்."

இதைக் கேட்டதும் கமரல்ஸமானுக்குக் கவலை அதிகரித்தது. ஆனால் கிழவன் ஆறுதல் கூறி அவனைத் தன் வீட்டிலேயே பத்திரமாகப் பாதுகாப்பதாக வாக்களித்தான். வேறு ஒன்றும் செய்வதற்கில்லையாகையால் இளவரசனும் கிழவனுடன் சேர்ந்து தோட்டத்தில் வேலை செய்து கொண்டு கப்பல் புறப்படும் காலை ஆவலோடு எதிர்நோக்கியிருந்தான்.

கமரல்ஸமான் இவ்வாறு பரிதாப வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கையில் இளவரசி பகதூரா என்ன செய்தாள் என்று தெரிந்து கொள்ள வேண்டாமா?

அவள் தூங்கி விழித்தெழுந்ததும், பக்கத்தில் தன் கணவனைக் காணாமல் பதறிப் போனாள். அதே சமயத்தில் அவள் தாயார் அவளுக்குக் கொடுத்த மந்திரக் கவசமும் காணாமற் போனது தெரிய வந்தது. சேனைகளை ஏவி அந்த ஊர் முழுவதும் தன் கணவனைத் தேடிப் பார்த்தாள். ஒன்றும் பலன் அளிக்கவில்லை. பகதூராவுக்குத் துக்கம் தாங்க முடியவில்லை. வெளியே சில காலம் துக்கம் காட்டாமல் மனம் வருந்தினாள். ஆனால் வருந்திப் பயனில்லை என்பதை அறிந்து தன் காதலனைத் தேடிக் கொண்டு பிரயாணத்தை ஆரம்பித்தாள். பெண்ணாக இருந்தால் வழியில் ஆபத்து ஏற்படலாம் என அஞ்சி பகதூரா தன் கணவனின் உடைகளை அணிந்து கொண்டு ஆண் வேஷத்தில் பிரயாணம் செய்தாள். கமரல்ஸமான் எனப் பெயரும் சூட்டிக் கொண்டாள்.

இவ்வாறு பல நாடுகள் கடல்கள் கடந்து பகதூராவும் அவள் பரிவாரமும் இபனி துறைமுகத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அச்சமயம் புயல் காற்றடித்ததால் அவர்கள் கப்பலை விட்டிறங்கினார்கள்.

இபனி நாட்டரசனான ஆரமனூஸ் இளவரசன் கமரல்ஸமான் கப்பலில் வந்திருப்பதாக அறிந்து தானே தனது பிரபுக்களுடன் துறைமுகம் சென்று அவனை வரவேற்றான். கமரல்ஸமானின் தந்தை ஷாஸமான் அவனது நண்பனாகையால் இபனி நாட்டரசன் கமரல்ஸமான் வேஷத்திலிருந்த இளவரசியைச் சகல மரியாதைகளுடன் உபசரித்து, அவரைப் பல நாட்கள் தனது அரண்மனையில் தங்கும்படி செய்தான். இளவரசனின் சாமர்த்தியத்தையும் நற்குணங்களையும் பாராட்டி விட்டு அந்த நாதன இளைஞனுக்குத் தனது ஒரே பெண்ணைக் கலியாணம் செய்து தருவதாகக் கூறினான். அப்படிக் கல்யாணம் செய்துகொண்டால் அவனையே தனது நாட்டு மன்னனாக முடி சூட்டுவதாகவும் வாக்களித்தான்.

ஆண் வேஷத்திலிருந்த பகதூராவுக்கு அரசனுடைய வேண்டுகோளைக் கேட்டதும் தர்மசங்கடமாக இருந்தது. அரசனின் வேண்டுகோளை மறுத்தால் ஆபத்து ஏற்படும் எனப் பயம். கல்யாணம் செய்து கொள்வதென்றால் ஒரு பெண் மற்றொரு






பெண்ணை எப்படி விவாகம் செய்து கொள்வது? அரசன் வேண்டுகோளுக்கு இணங்கி அவன் மகளை மணந்துகொண்டு அப்புறம் தப்பியோடி விடலாம் என பகதூரா முடிவு செய்தான்.

கமரல்ஸமான் சம்மதத்தைக் கேட்டதும் இபனி அரசன் சந்தோஷம் அடைந்தான். உடனே திருமணம், மகுடாபிஷேகம் இரண்டையும் முடித்து வைத்தான். பகதூரா தனது மனைவியுடன் தனியாயிருக்கையில் தன் கதையை அவளிடம் கூறி, எல்லாவற்றையும் ரகஸ்யமாக வைத்துக்கொண்டிருக்கும்படி கேட்டுக் கொண்டான்.

இபனி நாட்டு இளவரசி இந்தக் கதையைக் கேட்டுப் பிரமித்துப் போனாள். தன் நிலையைக் குறித்து அவள் வருந்தினாலும் பகதூராவின் கஷ்டத்தைக் கண்டு மனமிரங்கினாள். அவளுக்கு வேண்டிய உதவியெல்லாம் தான் செய்வதாக வாக்களித்தாள்.

பகதூரா ஆண் வேஷத்தில் இபனி நாட்டை அரசாண்டு வருகையில் இளவரசன் கமரல்ஸமான் கிழவனுடன் தோட்ட வேலை செய்து வந்தான். இவ்வாறிருக்கையில் ஒரு நாள் கிழவன் துறைமுகத்திலிருந்து கப்பல் ஏதாவது புறப்படுகிறதா என்று பார்க்கச் சென்றான். கிழவன் வெளியே போயிருக்கையில் கமரல்ஸமான் தோட்ட வேலையைக் கவனித்துக் கொண்டிருந்தான். அச்சமயம் இரண்டு பறவைகள் அருகிலுள்ள மரத்தின் மீது சண்டையிட்டுக் கொண்டிருந்தது அவன் காதில் கேட்டது. உடனே இளவரசன் தன் வேலையை அப்படியே போட்டு விட்டுப் பறவைகளின் சண்டையை இளவரசன் பார்த்துக் கொண்டிருக்கையில் ஒரு பறவை செத்து அவன் காலடியில் விழுந்தது. அந்தப் பறவை காயமடைந்த இடமொன்றில் ஏதோ பளபளப்பாகத் தெரிந்தது. உற்றுப் பார்த்ததில் அந்தப் பளபளப்பான வஸ்து காணமற்போன தனது காதலியின் மந்திர கவசம் என்பது தெரிந்தது.

இளவரசன் உடனே கவசத்தை எடுத்து ஓரிடத்தில் பத்திரப்படுத்தி விட்டுத் தன் வேலையைக் கவனிக்கலானான். ஒரு பட்டுப் போன மரத்தை வெட்டித் தள்ளுகையில் அதன் வேர் பாய்ந்த இடத்தில் ஒரு அகன்ற பித்தளைத் தகடு இருக்கக் கண்டான். அந்தத் தகட்டை அகற்றியவுடன் ஒரு குகை தெரிந்தது. அதனுள் நுழைந்து பார்த்தால் கீழே இறங்குவதற்குப் படிகள் இருந்தன. கமரல்ஸமான் நிதானமாகப் படிகளில் இறங்கிப் போனதும் ஐம்பது பித்தளை வாளிகள் இருக்கக் கண்டான். அந்த வாளிகளைத் திறந்ததும் ஒவ்வொன்றிலும் தங்கத் தூள் இருப்பது தெரிந்தது.

இவ்வளவு தங்கம் இருந்தது கண்டு பெரு மகிழ்ச்சியடைந்து கமரல்ஸமான் வேகமாக மேலே வந்தான். அச்சமயம் துறைமுகத்திலிருந்து கிழவன் திரும்பி வந்தான். இன்னும் மூன்று நாட்களுக்கெல்லாம் ஒரு கப்பல் புறப்படப் போவதாயும் அதில் இளவரசன் புறப்பட்டுச் செல்ல வேண்டும் எனவும் கிழவன் தெரிவித்தான்.

இந்த நற்செய்தியைக் கேட்டுப் பூரித்துப் போன கமரல்ஸமான் தான் கண்டெடுத்த தனத்தைப் பற்றிக் கூறிக் கிழவனை மகிழ்வித்தான். (தொடரும்)

### விடுகவி

செக்கச் சிவந்தவர் ஐவர், சிவப்பு
வாழைப் பழங்கள் மூன்று
கதலி வாழைப் பழம் நான்கு
பச்சைப் பாம்புக் குட்டி ஒன்று
இவர்களெல்லாம் ஒரு குடும்பத்தினர்

இவர்கள் யார்?

விடை அடுத்த இதழில்

சென்ற வார விடுகவிக்கு விடை:—ரூபாய்



# இரு செய்கைகள்

சங்கர சுப்பு

இரவு சுமார் பத்து மணி இருக்கும். பெரியதொரு சாலை வழியாக குமாரசாமி வெகு வேகமாக, நடையும் ஓட்டமுமாகப் போய்க் கொண்டிருந்தான். அடிக்கடி திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே வேறு நடந்து கொண்டிருந்தான்.

தலையில் முண்டாசாகக் கட்டியிருந்த துண்டைப் பிரித்துத் தோளில் போர்த்திக் கொண்டான்.

ஏகமாக தாடி மீசை வளர்ந்திருந்த போதிலும் பசியினால் அவன் முகம் வாடியிருந்தது நன்றாகத் தெரிந்தது.

சாலை முடிவு நெருங்கியது. சாலையின் முடிவில் நாலு வீதிகள் கிளைகளாகப் பிரிந்திருந்தன. பிரிந்த ஒரு வீதியில் வெகு வேகமாக நடக்க வாரம்பித்தான்.

அவ் வீதியிலுள்ள வீடுகளி லெல்லாம் விளக்குகள் அணைக்கப்பட்டு விட்டன. சற்று நடந்தவன், ஒரு வீட்டில் மட்டும் விளக்கு எரிவதை அவ்வீட்டின் ஜன்னலில் இடப்பட்டிருந்த திரைவழியே பார்த்துத் தெரிந்து கொண்டான்.

ஜன்னல் இருந்த சுவரிலிருந்து வழிந்தாற்போல் மூன்றடி அகலத்திற்கு ஒரு திண்ணை பாவியிருந்தது.

குமாரசாமி திண்ணையின் பக்கம் சென்று, ஜன்னல் திரைவழியாக உள்ளே பார்வையைச் செலுத்தினான்.

அங்கிருந்த லாந்தர் விளக்கின் திரி சிறிதுபண்ணி விடப்பட்டிருந்தது.

வீட்டின் முன் அறையின் ஒரு ஓரத்தில் ஒரு கிழவி இருமிய வண்ணம் படுத்திருந்தாள். வியாதி வெகு நாட்களுக்கு முன் அவளை அணுகி ஆட்டிக் கொண்டிருக்கிறது என்பதை அவள் உடல் நிலை தெரிவித்தது.

அதே அறையின் வாசற்படியருகில் ஒரு பூரண கர்ப்பிணி வெறுந் தரையில் தூங்காமல் விழித்துக் கொண்டு படுத்திருந்தாள்.

அந்த வீடு இரண்டே அறைகள் கொண்டது. முன் பக்க அறையும் அதன் பின் பகுதி சமையலறையும் தான். பழைய காரை வீடு. சமையலறையின் பின் பக்கம் ஒரு சிறிய கொல்லை இருந்தது.

குமாரசாமி திண்ணையிலிருந்து பின் தள்ளி வந்து, அக்கம் பக்கம் ஒரு 'நோட்டம்' பார்த்தான்.

வீடு தனிமையில் சிறிதாக விருந்தது. வீட்டின் பக்கத்தில் அணைந்தாற்போல் ஓடின சந்து வழியாகப் பின்புறம் சென்று, பின் வாசலின் கதவைச் சற்றுத் தள்ளிப் பார்த்தான். உள் பக்கம் கதவு நன்றாக தாளிடப் பட்டிருந்தது.

உடனே பார்வையை உயர்த்தி பின்புற சுவரைப் பார்த்தான். சிறிது தாழ்வாக விருந்தது. கதவின் நடுச் சட்டத்தில் காலை ஊன்றி சுவர்மீதேறி, உட்புறம் அங்கிருந்த கீரைப் பாத்தியில் சத்தம் போடாமல் கீழே குதித்தான்.

மெதுவாக அடியெடுத்து வைத்துச் சமையலறைக்குச் சென்றான்.

சமையலறைச் சுவரின் ஆணியில் ஒரு கோழி முட்டை விளக்கு தொங்கியிருந்தது. சிறிதாக எரிந்து கொண்டிருந்த திரியைப் பெரிது பண்ணி சுற்று முற்றும் கூர்ந்து பார்த்தான்.

அடுப்பருகில் சோறு, கறி, குழம்பு சமைத்து மூடி வைக்கப் பட்டிருந்தது. சமையலறையின் கதவு வெளிப்புறம் தாளிடப் பட்டிருந்தது. முன் ஜாக்கிரதையாக, சாப்பிட உட்காருமுன், கதவின் உள்புறத் தாழ்ப்பாளையும் போட்டான்.

பாத்திரத்துடன் சாப்பிடத் துவங்கினான்.

பக்கத்து அறையிலிருந்து பேச்சுக்குரல் கேட்டது.

"அகிலாண்டம், குஞ்சு இன்னம் வரலே? இனிமே வந்துதான் சோறு தின்கணுமா? காலமில்லாத காலத்திலே வந்துதான் தின்கணும்னு அவன் தலையிலே எழுதியிருக்கு. என்ன உத்தியோகமோ இந்தப் போலீஸ் உத்தியோகம்! ஒருநாளைக்கு இருக்கின ஜோர்லே, சூடா தின்னது கிடையாது. அது ஆறி அவலாகப் போன பிற்பாடு தின்னால் வயித்துலே என்ன ஒட்டும்......" என்று ஆரம்பித்து 'லொக்கு, லொக்கு' என்று இருமிப் பேச்சை முடித்தாள்.

"தினமும் இன்னேரத்துக்கு வந்திடுவாரே! இன்னிக்கு ஒரு காணுமில்லாமே நேரம்? இப்போ வந்திடுவாரு. நீங்க பேசாமே தூங்குங்க. சோறு பொங்கி மூடி வச்சிருக்கேன். வந்து தின்பாரு."

"இன்னும் எத்தினி நாளிக்கு இப்படி இழுத்துக்கிட்டு கிடக்கப்போறேனோ தெரியலே. சட்டுன்னு மூச்சுநின்னு பூட்டதுன்னு ஒரே செலவாபூடும். இப்படி கொண்டு போகாமல் படுத்துதே. குஞ்சு பணத்துக்குத் தான் சிரமம்; டாக்டரு பீஸு விஷமா ஏறிப்பூட்டுதாம். இருநூறு ரூபா இப்பவே ஆயிடுத்தாம், தம்பி காலையிலே சொல்லிச்சு."

"ஏன் வீணா அலட்டிக்கிறீக, தூங்குங்க. வியாதி குணம் ஆகணும்னு பணத்தைப் பார்த்தா முடியுங்களா? வாயை வயித்தை ஒடுக்கி கடனை அடைச்சப்புடலாம். இப்போ எழுந்து நடமாடினால் போதும். வயித்துலே வேற ஒரு கல்யாணி உட்கார்ந்திருக்கு. அதுக்கு வேற செலவு இருக்கு. 'போலீஸ் அய்யா'ன்னு சலாம் போட ஆள் இருக்காக. பணங்கொடுத்து உதவத்தான் ஆள் இல்லே. பணத்துக்கு எங்கே போறது? என்ன பண்ணப் போறீரோ?"

"ஆமா, சமையலறைக் கதவு மூடியிருக்கா? பூனை கீனை குழம்பு கறியைச் சரிச்சுவிட்டு பாழ்பண்ணப் போவுது."

"நல்லாத்தான் பதார்த்தப் பாத்திரத்தை அழுத்தமா தட்டுபோட்டு மூடியிருக்கேன். சமையலறைக் கதவையும் மூடித் தாழ்ப்பாள் போட்டுத்தா னிருக்கேன்."

சம்பாஷணையைக் காதில் வாங்கிய வண்ணம் அவசர அவசரமாகச் சோற்றுப் பாத்திரத்தைக் காலி செய்து, கொல்லைக் குழாயில் கைகழுவி விட்டு, கொல்லைப்புறக் கதவைத் திறந்துகொண்டு வெளியே விரைந்து சென்றான் குமாரசாமி.

* * *

கான்ஸ்டேபிள் குஞ்சுப் பிள்ளை 'லைச, லைச' என்று லாடம் அடித்த பூட்ஸ் சப்தத்துடன் வாசல்படி யேறிக் கதவை ஆள் காட்டி விரலின் நடுக் கணுவினால் தட்டினான்.

தலையிலிருந்த சிவப்புத் தொப்பியை எடுத்துக் கையில் வைத்துக்கொண்டு, மற்றொரு கையால் சிராயின் பக்கவாட்டு ஜேபியில் கைவிட்டுக் கைக் குட்டையை எடுத்து முன் நெற்றியை துடைத்துக் கொண்டான்.

அதற்குள் கதவு திறக்கப்பட்டது.

குஞ்சுப் பிள்ளை உள் நுழைந்ததும், கதவைத் தாளிட்டு விட்டு, அவனுக்குப் பின்னால் வந்தாள், அவன் மனைவி அகிலாண்டம்.

"இந்தா, நீ உட்காரு. நான் காரியத்தை எல்லாம் பார்த்துக் கொள்கிறேன்."

"சோறு பொங்கி வைச்சிருக்கேன். சொக்கா சிராயைக் கழற்றிக் கைகால் கழுவிக் கொண்டு சாப்பிடுங்க" என்று சொல்லிக் கொண்டே லாந்தர் திரியைப் பெரிது செய்தாள் அவன் மனைவி அகிலாண்டம்.

அறையில் வெளிச்சம் பரவியது. உடைகளைக் களைந்தெறிந்து கொண்டே, "ஏ, முன்னே நான்தான் சொன்னேனே, நான் வந்து சோறு சமைக்கிறேன்னு. உனக்கு ஏன் இந்த அவதி? மாசக்காரி உடம்பை இப்படி அலட்டிக்காதே என்று சொன்னால் கேட்டால்தானே? சரி, போவதுபோ. போய்ப் படுத்துத் தூங்கு" என்று பரிவாய்ப் பதில் சொல்லி அவளுக்குப் பாய்விரித்துத் தலையணை வைத்து, சமையலறைக் கதவைத் திறந்துகொண்டு கொல்லைக்குச் சென்றான். கொல்லைப் பக்கம் சென்றவன் கதவு திறந்து கிடப்பதைப் பார்த்ததும் முதலில் திடுக்கிட்டான். பிறகு, 'அகிலாண்டம் அவசரத்தில் தாள் போட மறந்திருப்பாள்' என்று நினைத்து அதைத் தாளிட்டுக் கொண்டு, கால் கை சுத்தி செய்து கொண்டு உள்ளே நுழைந்தான்.

கொடியிலிருந்த துண்டை எடுத்துத் துடைத்துக் கொண்டே "அகிலாண்டம், தூங்கி விட்டாயா? ஆமா, கொல்லைக் கதவு திறந்து கிடக்குதே, தாழ்ப்பாள் போட

மறந்து போய் விட்டாயா? சரி, படுத்துக்க, நான் சாத்திட்டேன்" என்றான்.

"இல்லீங்களே, நல்லா அழுத்தமா ஒரு முறைக்கு இரு முறையாகப் பார்த்துத் தானே தாழ்ப்பாள் போட்டு வந்தேன், திறந்து கிடக்குது என்கிறீங்களே!"

"சரி, போ மறந்திட்டிருப்பே. தூக்கக் கலக்கம்...ஊம்...தூங்கு" என்று பதிலளித்து விட்டுச் சமையலறைக்குச் சென்று சோற்றுப் பாத்திரத்தைத் திறந்தான்.

பாத்திரத்தில், பண்டம் எதுவுமின்றி காலியாக இருக்கவே, ஆச்சரியமாகப் போய் விட்டது குஞ்சப் பிள்ளைக்கு.

"எட்டி, சோறு வாளு காலியால்லே கிடக்குது. குழம்புத் தண்ணி கூடக் கொஞ்சம் போலத்தான் இருக்கு."

"இதென்ன கூத்தால்லே இருக்கு. அரைப்படி அரிசி பொங்கி வைச்சேன். மணி சோறு இல்லேங்கிறீங்களே! யக்ஷிணி வேலையா? எங்க புரியாமல்லே இருக்கு!"

"கொல்லைக் கதவைத் திறந்து வைச்சுப் படுத்துக் கிட்டிருந்தேல்லே. நாய் வந்து தின்னுட்டிருக்கும். சரி, நீ படுத்துக்கோ. மோரைக் குடிச்சிட்டு வர்றேன், அது போதும். சாயங்காலம் அய்யரு கடையிலே பலகாரம் வேறே தின்னுட்டேன். வயிறு ரொம்ப கனமா இருக்குது."

"செத்தே முந்திக் கூட ஏதோ பாத்திரச் சத்தம் கேட்டுச்சு. எலியோ என்று நினைச்சு பேசாம படுத்திருந்தேன். பிறகு எழுந்திருந்து சமையலறைக்குப் போய்ப் பார்த்ததாகக் கூட ஞாபகம். ஒரு வேளை எழுந்து பார்க்கலாம்னு நினைச்சுகிட்டே படுத்துகிட்டே யிருந்தேன் போல. கண்ணை மூடிட்டிருப்பேன். அப்போ உன்னே போய் பார்த்து விட்டு வராப்போல கனவு கண்டிருப்பேன்" என்றாள் அகிலாண்டம்.

"சரி, புள்ளே, படுத்துத் தூங்கு" என்று சட்டியிலிருந்த மோரைக் குடித்து விட்டு, பாயை விரித்துப் படுத்தான் குஞ்சப் பிள்ளை.

கிழவி சுகமாய்த் தூங்கிக் கொண்டிருந்தாள். அகிலாண்டம் கேட்டாள்: "எங்க, காலைக்கு டாக்டரு பணத்துக்கு வந்திருப்பாரே, ஏதாவது ஏற்பாடு பண்ணினீங்களா? என்னையும் ஆஸ்பத்திரியிலே கொண்டு விடணும். அதுக்கும் பணம் வேணுங்களே. யாரையாவது கேட்டீங்களா?"

"இரண்டொரு இடத்துலே விசாரிச்சேன். ஒண்ணும் தேறலே. இன்னொரு இடத்துலே சொல்லி வைச்சேன் இன்னிப் பொழுதுக்கு வரச் சொன்னான். போக முடியாதபடிக்கு வேலை வந்து விட்டது."

"எங்க...?"

"ஜெயிலிலேயிருந்து ஒரு பெரிய 'கேடி' கம்பியை வளைச்சு வெளியிலே ஓடிப்போயிட்டான். காவலுக்கு கொலை பண்ணியிருக்கான். அவனை ஊரெல்லாம் வலை போட்டுத் தேடிக்கிட்டிருக்காங்க. ஏழு வருஷம் ஜெயிலிலே இருக்கணும்; வருஷம் மூணு தான் முடிஞ்சிருக்கு. அவனைத் தேடணும் ஊரைச் சுத்தினேன். ஆனா கண்ணிலேயே காணோம். அவனைச் சுருக்க பிடிக்கலேன்னு, இன்னும் எங்கேயாவது கன்னம் கின்னம் வைப்பான்; கொலை கிலை விழுந்துடும். காலைக்கெல்லாம் இதுதான் வேலை. ரொம்ப பயங்கரமான ஆளு. அதான் இன்னிக்கு இவ்வளவு நாழிகை....காலைக்கு இல்லேன்னு மத்தநாளு விசாரிச்சு [illegible] கடன் வாங்கியாறேன். இப்போ நீ தூங்கு" என்று ஆறுதல் கூறினான் குஞ்சப் பிள்ளை.



* * *

மணி பன்னிரண்டு. நிலவில் ஒரு துண்டைப் போர்த்தியவாறு தெருவில் நடந்துகொண்டிருந்தான் குமாரசாமி.

அவனுக்குத் தன் பணியைத் தீர்த்துக்கொண்ட வீட்டின் நினைவுதான் அடிக்கடி வந்தது. அவ் வீட்டில் அவன் கேட்ட சம்பாஷணைதான் சதா அவன் காதில் ஒலித்துக்கொண்டிருந்தது. அவர்களுக்கு உதவி செய்ய மனம் விரும்பியது. அவன் உதவ

வும் தயாராய் இருந்தான். ஆனால் வழி ஏதும் அவனுக்குத் தென்படவில்லை.

யோசனையில் ஆழ்ந்து தாடியை உருவி விட்டுக் கொண்டு நடந்து சென்றவன், ஒரு பெரிய வீட்டின் மாடியில் மின்சார விளக்கு எரிவதைக் கண்டான்.

அவ்வீட்டின் வாசலில் ஒரு சிறிய தோட்டம். தோட்டத்தை அடைத்து ஒரு 'காம்பவுண்டு' சுவர்.

ஏதோ நினைத்தவனாய், பங்களா கதவைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தான்.

பங்களாவை நெருங்கினதும் தலை தூக்கி விளக்கெரியும் அறையைப் பார்த்தான். மேல் மாடியிலிருந்து மழை ஜலம் கீழே வடிவதற்குத் தரையைத் தொடுமளவிற்கு இறக்கியிருந்த இரும்புக் குழாயைப் பார்த்தான்.

பிறகு 'மட மட'வென்று குழாயைப் பற்றிக்கொண்டு ஏறி முதல் மாடிக்குச் சென்றான்.

மாடி அறையில், மேஜை முன் ஒரு நாற்காலியில் அமர்ந்து, அன்றைய சினிமா வசூல் தொகையைக் கணக்குப் பார்த்துக் கொண்டிருந்தார் பிரபல சினிமா கொட்டகை முதலாளி ஆரணி அமிர்தலிங்க உடையார்.

குமாரசாமி அவருக்குப் பின் பக்கமாக சென்று, "எனக்கு இரு நூற்றைம்பது ரூபாய் இப்போது வேண்டும். கொடுக்கா விட்டால் உன் மண்டையை உடைத்துவிடுவேன். பின்னால் திரும்பாதே. கையில் பட்டாக்கத்தி வைத்திருக்கிறேன். புடனியில் செருகிவிடுவேன்" என்றான்.

திடுக்கிட்டுப் போனார் உடையார். அவர் உடல் வெட வெடத்தது.

மேஜையிலிருந்த பணத்தை இரு கைகளாலும் பொத்திக்கொண்டு பின் திரும்பினார்.

உயிரைவிட, பணம் பெரிது என்று எண்ணினார் போலும்!

தன் கையினால், பின்னால் திரும்பின உடையாரின் கழுத்தை அழுத்தினான்.

"ஐயோ!" என்று கத்தினார் உடையார்.

"கூச்சல் போட்டால் அடி. உரித்து விடுவேன். மரியாதையாக நான் கேட்ட பணத்தைக் கொடுத்துவிடு. உயிரோடுவிட்டு விடுவேன்" என்று கூறி உடையார் வாயைப் பொத்த முயன்றான்.

குமாரசாமி கையில் கத்தி இல்லாததைக் கண்டதும் உடையாருக்குச் சற்று தைரியம் ஏற்பட்டது. நாற்காலியைப் பின்னால் தள்ளி விட்டு வேகமாக எழுந்து குமாரசாமியின் கழுத்தைப் பிடிக்கப் போனார்.



நாடகக் கம்பெனிக்காரர் :- நேற்று வந்த ஜனங்களை யெல்லாம் திருப்பி அனுப்ப வேண்டியதாகி விட்டது!

நாடக அபிமானி :—என்ன, அவ்வளவு கூட்டமா?

நாடகக் கம்பெனிக்காரர் :- இல்லை இல்லை! மூன்றே பேர் வந்திருந்தார்கள். மூன்று பேர்களுக்காக எப்படி நாடகம் நடத்துவது என்று அவர்களைத் திருப்பி அனுப்பி விட்டோம்!

---

"அவ்வளவு துணிச்சல் வந்து விட்டதா உனக்கு? கொலை செய்யவேண்டாம் என்று நினைத்தேன். நீ கொலை செய்ய நிர்ப்பந்தம் செய்கிறாய். கொலை எனக்குப் புதிதில்லை. நாலு ஏற்கெனவே செய்திருக்கிறேன்" என்று சொல்லிய வண்ணம் உடையாரின் கழுத்தை நெரித்தான்.

அவர் தொண்டையிலிருந்து கூச்சல் பெரிதாகக் கிளம்பி, சிறிதாகி, ஒரு நூல் இழையாக வெளிவந்தது. பிறகு நின்றுவிட்டது.

தலை 'லொட்டு' என்று கீழே விழுந்தது. உடையாரை அப்படியே கீழே கிடத்தி மேஜையிலிருந்த பணத்தில் இருநூற்றைம்பது ரூபாயையும், அங்கிருந்த ஒரு அலமாரியைத் திறந்து ஒரு வேஷ்டியையும் ஒரு சட்டையையும் எடுத்துக் கொண்டு வந்தவழியே திரும்பி விட்டான்.

* * *

மறு நாள் தினசரிகளில் கீழ்க்கண்ட தலைப்புகளுடன் செய்திகள் வெளியாகி யிருந்தன.

**பயங்கரக் கைதி தப்பியோடி விட்டான்! சிறை அதிகாரிகளின் பந்தோபஸ்துத் திறமையை வெட்ட வெளிச்சமாக்கி விட்டான்!**

வேலூர், ஏப். மீ 15உ.

குமாரசாமி என்னும் கைதி, பல பெரிய கொலை களவுகள் நடத்தியிருப்பவன், இன்று

சாயங்காலம் சுமார் ஏழு மணிக்குச் சிறையி லிருந்து தப்பியோடிவிட்டான், காவல் காரர்கள் கண்ணில் மண்ணைத் தூவிவிட்டு.

அவன் ஏழு வருஷக் கடுங்காவல் தண்டனை விதிக்கப் பட்டவன். வருஷங்கள் மூன்றுதான் நேற்றுவரை முடிந்திருக் கின்றன. போலீஸார் வெகு தீவிரமாகக் கைதியைப்பிடிக்க முயற்சித்து வருகிறார்கள்.

கைதி இன்னும் உள்ளூரில் இருக்கிறான் என்கிற வரையில் தெரிகிறது."

• • •

"கொலை! கொலை!! கொலை!!!

பிரபல சினிமா தியேட்டர் முதலாளி மாண்டார்.

வேலூர் எப். மீ 16உ

"பிரபல சினிமா கொட்டகைக்காரரான ஆரணி அமிர்தலிங்க உடையார், இன்று காலை தம் அறையில் மாண்டு கிடந்ததாக, அவருடைய வீட்டு வேலையாள் மன்னார் போலீஸுக்கு சுமார் எட்டு மணிக்குத் தகவல் கொடுத்தான். உடனே சப் இன்ஸ்பெக்டர் திரவியம் ஸ்தலத்துக்கு விரைந்து சென்றார். உடையார் கொலை செய்யப்பட்டிருக்கிறாரென்று ஊகிக்கப்படுகிறது.

தற்கொலையாக இருக்க முடியாது என்றும் நிச்சயம் செய்யப்பட்டிருக்கிறது. துப்பு எதும் இதுவரை கிடைக்கவில்லை.

உடையார் வீட்டு வேலையாள், உடையார் மரித்துக் கிடந்த செய்தியை போலீஸுக்குத் தெரிவித்த போதிலும், உடையார் கொலை செய்யப்பட்ட போது அவன் மட்டுமே பங்களாவில் இருந்தமையால், அவனைக் கைது செய்து 'லாக்கப்'பில் வைத்திருக்கிறார்கள். போலீஸார் புலன் விசாரித்து வருகின்றனர்."

• • •

அதற்கு மறு நாள் இந்தச் செய்தி வெளியாயிற்று.

"சிறையி லிருந்து தப்பிச் சென்ற கைதி பிடிபட்டான். கான்ஸ்டேபிள் குஞ்சுப் பிள்ளையின் தீரச் செயல்.

வேலூர் எப். மீ 16உ

"நேற்றிரவு சிறைக் கம்பிகளை வளைத்துத் தனக்கு வழி ஏற்படுத்திக் கொண்டு தப்பிச் சென்ற குமாரசாமி என்னும் கைதி, இன்று காலை பதினொரு மணி சுமாருக்கு உள்ளூர் தலைமைத் தபாலாபீஸுக்கு அருகில் பிடிபட்டான்.

தபாலாபீஸின் படிகளில் தன் முகத்தை ஒரு துண்டால் மறைத்துக் கொண்டு இறங்கின 'கேடி' அப்போது அப்பக்கம் எதேச்சையாய் வந்த கான்ஸ்டேபிள் குஞ்சுப் பிள்ளையின் பார்வையில் பட்டான்.

கான்ஸ்டேபிள் தன்னைச் சந்தேகத்துடன் பார்ப்பதைக் கவனித்த கைதி முதலில் திடுக்கிட்டு, பிறகு தன்னைச் சமாளித்துக்கொண்டு அவனைப் பார்க்காதது போல் வேறு திசையாகச் சென்றான். ஒரு வேளை தன்னைப் போலீஸ் சேவகன் தொடர்ந்து வருகிறானோ என்ற சந்தேகத்துடன் ஜாடைமாடையாகப் பின் திரும்பிப் பார்த்தான்.

குஞ்சுப்பிள்ளை, கைதியைப் புரிந்து கொண்டு அவனைப் பின் தொடரலானார்.

கைதி திடீரென்று வேகமாக ஓடிச் சட்டென்று ஒரு சந்திற்குள் நுழைந்து தப்பித்துக் கொள்ள யத்தனித்தான்.

போலீஸ்கார பிள்ளை, தொடர்ந்து ஓடி அவன்மீது பாய்ந்து பிடித்தார்.

குமாரசாமி திமிறி ஓட முயன்றான். தன் இடையிலிருந்த தடியினால் கைதியின் மண்டையில் ஓங்கி அடித்தார், போலீஸ் குஞ்சுப் பிள்ளை.

வலி பொறுக்காது கீழே விழுந்து விட்டான் குமாரசாமி.

இப்போது கைதி தனிப்பட்ட பந்தோபஸ்தில் வைக்கப்பட்டிருக்கிறான்.

பிரபல 'கேடி'யைச் மிகச்சாமர்த்தியமாக மடக்கி, போலீஸ் இலாகாவிற்கே வரவிருந்த அகௌரவத்தைத் தடுத்த கான்ஸ்டேபிள் குஞ்சுப் பிள்ளைக்கு, போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் பத்து ரூபாய் வெகுமானமாக அளித்தார்."

• • •

இரண்டு நாள் கழித்து குஞ்சுப் பிள்ளையின் மனைவி, அகிலாண்டத்திற்கு ரூபாய் இருநூறுக்கு ஒரு மணியார்டர் வந்தது.

அனுப்பி வைத்தவர் பெயர் 'மாணிக்க வாசகன்' என்று எழுதப்பட்டிருந்தது. அவருடைய விலாச விவரம் சரியாக இல்லை.

மணியார்டர் கூப்பனில்,

'தங்கள் குடும்பச் சிரமம் தெரிந்துகொண்டேன். நேற்று இரவு பசியோடு களைத்து வந்திருந்த நான், தங்கள் வீட்டில் அழையாத விருந்தாளியாக நுழைந்து சாதம் எடுத்துச் சாப்பிட்டுக் களைப்புத் தீர்த்தேன். அதற்கு வந்தனம். இதைப் பெற்றுக் கொள்ளவும்.

தங்கள்,

மாணிக்கவாசகன்'

என்று எழுதப்பட்டிருந்தது.

# மேகம் விலகியது

ர. வேங்கடரத்தினம்

## 1. சுமங்கலா

கல்யாணியைப் போய்ப் பார்த்து விட்டு வரலாம் என்று கிளம்பினேன். அவளைப் பெண் பார்க்க வந்த விஷயம் என்ன ஆயிற்று என்று அறிந்து கொள்ள என் மனம் துடித்த வண்ணம் இருந்தது. விசாரித்து வரலாம் என்று கிளம்பினேன். நல்ல வேளையாக நடுவழியிலேயே அவள் வந்து விட்டாள்.

"உன் சமாசாரம் என்னடி ஆயிற்று?" என்று ஆவலோடு கேட்டேன்.

கல்யாணி நாணிக் கோணிக் கொண்டு "விட்டுத் தள்ளு" என்றாள்.

"என்னத்தை விட்டுத் தள்ளுவது? அவன் வந்தானா? உன்னைப் பார்த்து என்ன சொன்னான்? ஒன்றுமே சொல்லாமல், விட்டுத் தள்ளென்றால், என்னடி அர்த்தம்?"

"அந்தப் பையனுக்கு என்னைப் பிடிக்கவில்லையாம்."

"நிஜமாகவா?"

"பின்னே பொய்யா?"

"அவனுக்குக் கண் பொட்டையா? அல்லது சித்த சுவாதீனம் இல்லாதவனா?"

"என்ன, இப்படிக் கேட்கிறாய்?"

"இல்லை; உன்னையே பிடிக்கவில்லையென்று சொல்லி விட்டான் என்றால், நம்ப முடியவில்லை என்றால்."

கல்யாணி சுவாரஸ்யம் இழந்து, தலை குனிந்து கொண்டு நின்றாள்.

"வா போகலாம். நீ வருத்தப்படாதே. அந்த விஷயத்தையே 'விட்டுத் தள்ளு'" என்று அவளை இழுத்துக் கொண்டு, வீடு நோக்கி நடந்தேன்.

அவள் நல்ல அழகி. ஆனால் ஏழை. பெண்ணுக்குப் பெண் ரூப விஷயத்தில் மட்டும் தன்னை விட்டுக் கொடுத்துவிட மாட்டாளாமே! அப்படிப் பார்த்தாலும், நான் தயங்காமல் ஒப்புக் கொள்கிறேன்; என்னைக் காட்டிலும் அவள் எவ்வளவோ மடங்கு அழகு மிகுந்தவள். இத்தனைக்கும், நானே ரொம்ப லட்சணமாய் இருக்கிறேனாம்; எல்லாரும் சொல்கிறார்கள். அவளையே பார்த்துப் பிடிக்கவில்லை என்று சொல்லி விட்டுப் போனவன் எனக்கு விசித்திரப் பிரகிருதியாகத்தான் தோன்றினான்.

"உன்னைவிட வா நல்ல அழகி அவனுக்குக் கிடைத்து விடப் போகிறாள்?" என்றேன்.

"ஆரம்பித்து விட்டாயே ஸ்தோத்திரம்!"

"அப்படியானால், நீ அழகில்லை என்கிறாய்; இல்லையா?"

கல்யாணி தனக்கே உரிய மோகனப் புன்முறுவலை விடையாகத் தந்தாள்.

"நிஜமாகச் சொல்கிறேன். உன் அழகிற்கென்ன குறைச்சல்? அவன் பிடிக்கவில்லை என்றதனால் வருத்தப்படாதே."

"போடி, அவனுக்காக இங்கே யார் வருத்தப்படுகிறார்களாம்? என்னவோ வந்தான்; பார்த்தான்; தின்றான்; போனான். எல்லாம் இரண்டு மணி நேரச் சகவாசம்..."

"உன் மனசு எனக்குத் தெரியாதா? அப்பா—அம்மாவுக்குப் பாரமாய் இருந்தது போதும். இனியாவது நாம் எங்கேயாவது பிரிந்துவிட வேண்டும் என்ற எண்ணம் உனக்குக் கிடையாதா, சொல்லு."

அவள் தலையை அசைத்தாள்.

"இன்னொரு முக்கியமான விஷயம் கேட்க மறந்து போய்விட்டேன்" என்று நான் குறிப்பிட்டதும், அவள் திகைப்புடன் "என்ன?" என்றாள்.

"தன் மனைவி ரொம்ப அழகியாய் இருக்க வேண்டும் என்கிறானே, அவன் எப்படி இருக்கிறான்? அதைச் சொல்லவில்லையே."

"இது என்ன கேள்வி?"

"நல்ல கேள்வி தான்; பதில் சொல்லு."

"நான் அவனைக் கவனிக்கவில்லை.

"பொய் சொல்கிறாய்! அவனைக் கடைசி வரை, பார்க்காமல்தான் இருந்தாயாக்கும்?"

"நிஜமாய்த்தான்! அவன் சிவப்பா, கருப்பா என்பது கூடத் தெரியாது."

"அவனைப் பார்க்காமல், யாருக்குப் போய் நமஸ்காரம் பண்ணினாய்?"

"ஒன்றரை மணி நேரம் ஆளை அப்படியே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்து விட்டு சாமுத்ரிகா இலட்சணங்களின்படி இருக்கிறானா என்று கவனித்துப் பார்த்துக்கொண்டு, நீ நமஸ்காரம் பண்ணப் போவாய் போல் இருக்கிறது."

"பின்னே, நீ கண்ணை இறுக மூடிக் கொண்டு, எங்கேயாவது போய்த் தலையை முட்டிக் கொண்டாயாக்கும்!"

"உத்தேசமாய், ஆள் உட்கார்ந்திருக்கிற இடத்தைப் பார்த்துக் கொண்டு, அந்தத் திசையில் பத்தடி தூரம் நடந்து போய், அங்கே நமஸ்காரம் பண்ணினேன். அவன்

அங்கே இருந்தானே, இல்லையோ, எனக்கொன்றும் தெரியாது.''

''உன் புளுகை நான் நம்பத் தயாரில்லை'' என்னும் பாவனையுடன் சற்றுக் கோபத்துடன் நான் முகத்தைத் திருப்பிக் கொண்டதும், கல்யாணி என்னைச் சாந்தப் படுத்தும் தோரணையில் என்னைப் பார்த்தாள்.

''அவன் பெயர் என்னவாம்?'' என்றேன்.

''பத்மநாபனும்.''

''நல்ல மகானுபாவன்!'' என்று நான் அவனைக் கேலி செய்யும் முறையில் சொன்னதும், அவளும் சிரித்தாள்.

அப்போது, பின்னால் என்னைப் பெண் பார்க்க வரப் போகிறவன் அந்தப் பத்மநாபன் என்பது எனக்குத் தெரியுமா? அவன்தான் கல்யாணியைப் பார்த்துவிட்டுப் போனவன் என்று எனக்குத் தெரிந்தது. நான் முறைப்படி அவனுக்கு நமஸ்காரம் செய்தேன். பாடினேன்; கேட்டான். எதிரே சென்று நின்றேன்; பார்த்தான். பலகாரம் சமர்ப்பித்தேன்; ருசி பார்த்தான்! உள்ளே வந்தேன்; புறப்பட்டான்.

எல்லாச் சடங்குகளும் ஆனதும் கிளம்பி விட்டான். நல்ல அழகு நிரம்பிய கல்யாணியைப் பார்த்துப் பிடிக்கவில்லை என்று கூறியவன் தானே? நன்றாய் வஞ்சம் தீர்த்துக் கொள்ளலாம் என்று நான் பூரித்துப் போனேன். அவள் ஏழை, பணம் - காசு இல்லாத இடம் என்று நிஜக் காரணத்தைச் சொல்லாமல், 'பிடிக்கவில்லை' என்று பொய்க் காரணம் சொல்லி ஏமாற்றியவன் அவன். இப்போது சரியாய் அவனை மண்டையில் அடிப்பதற்கு வாய்ப்புக் கிடைத்திருக்கிறது என்று நான் சொல்லிக் கொண்டேன்.

''அம்மா, எனக்கு அவனைக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை'' என்று அம்மாவிடம் சொன்னேன்.

''என்னடி உளறுகிறாய்?''

''எனக்கு அவனைப் பிடிக்கவில்லை.''

அவள் திருதிருவென்று விழித்தாள்.

''நான் அவனைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள மாட்டேன்.''

''ஏன் மாட்டாய்?''

''அதெல்லாம் பெரிய கதை. வேண்டுமானால், சொல்கிறேன். அவன் தான் என் சிநேகிதி கல்யாணியைப் பார்த்து விட்டு, பிடிக்கவில்லை என்று சொல்லிவிட்டுப் போனவன். அவளுடைய அழகு இந்தச் சுந்தரனுக்குப் போதாதாம். ஏனென்றால், அவள் ஏழை யல்லவா?''

''இப்பொழுது, என்னை என்னடி பண்ணச் சொல்லுகிறாய்?''

''பணத்திற்காகத் தான் அவன் என்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளச் சம்மதிக்கிறான். அதனால் அவன் எனக்கு வேண்டாம். பெண்ணுக்குப் பையனைப் பிடிக்கவில்லையென்று அப்பா எழுதி விடட்டும்.''

''இது என்ன வம்பாய் இருக்கிறது?''

''ஏது அம்மா? காரணத்தைச் சொன்ன பிறகும், நீ விடமாட்டாய் போல் இருக்கிறதே!''

''இஷ்டமில்லையானால், நீ அவனைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள வேண்டாம். அதற்காக, நீ சொல்கிறபடி எழுதுகிறதா? பெண்ணுக்குப் பையனைப் பிடிக்கவில்லை என்கிறது உண்டா? நீ சுயம்வரமா பண்ணிக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறாய்?''

''அவன் மட்டும் பொய்க் காரணம் எழுதலாம். நாம் மட்டும் எழுதப் படாதோ?''

''இந்தச் சம்பந்தத்தில் சில அசௌகரியங்கள் இருப்பதாக, எழுதிப் போட்டால் தீர்ந்தது.''

''அம்மா, நான் சொன்னால் உனக்குத் தெரியாது. கல்யாணியினிடம் வம்பு பண்ணினதற்கு, பழிக்குப் பழி வாங்க வேண்டாமா நாம்? அதனால் தான் சொல்கிறேன். மண்டையில் தட்டினாற் போல், பெண்ணுக்குப் பையனைப் பிடிக்கவில்லை என்று



அவனுக்கு எழுதினால், மூக்கு அறுபட்டாற் போல் இருக்கும்."

"சரிடியம்மா" என்றாள் அம்மா.

என் விருப்பப்படியே, அப்பா அந்தப் பத்மநாபனுக்கு கடிதம் எழுதி விட்டார்.

"இது நிற்க" என்று கதைகளில் கிளை விட்டுக் கிளை பாய்வார்களே, அது போல இங்கும் ஒரு முக்கிய சம்பவத்தைக் குறிப்பிட்டுவிட்டு, மேலே செல்கிறேன்:

நான் பள்ளிக்கூடத்திற்குச் சென்றதும், என் சிநேகிதி ஒருத்தி என்னிடம் வந்து கடிதம் ஒன்றை நீட்டினாள். அது என் பெயருக்கு எழுதப்பட் டிருந்தது. நான் அதை வாசித்ததும் அப்படியே திகைத்துப் போய்விட்டேன்.

"அன்புள்ள சுமங்களா,

நீ வகுப்பில் என்னையே உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதை நான் கவனித்தேன். அதன் உள் அர்த்தத்தையும் உணர்ந்தேன். என் மீது விழும் பார்வையில் கனிந்து வரும் அன்பையும் நுகர்ந்தேன். உன்னை இன்று மாலை குளத்தங்கரை அரச மரத்தடியில் சந்திக்க முயற்சி செய்கிறேன். உனக்கு என் அன்பு!—"

இதுதான் அந்தக் கடிதம். என் தலை சுழன்றது. என்ன செய்வதென்று தெரியவில்லை. யார் எழுதிய கடிதம் என்பதும் புலப்படவில்லை. அக்கடிதத்தைத் தலைமை ஆசிரியரிடம் கொண்டுபோய்க் கொடுத்தேன். அவர், எனக்கு யார்மேல் சந்தேகம் என்று கேட்டார். மௌனமாக இருந்தேன். கடைசியில் அவர் இந்தக் கடிதத்தின் கையெழுத்துள்ள மாணவன் யாரும் இந்தப் பள்ளிக்கூடத்திலேயே இல்லை என்று சொல்லி விட்டார்.

அன்று முதல் என் வாசிப்புக்கு முற்றுப் புள்ளி வைக்கப்பட்டது.

எனக்கு வாசிப்பு நின்றதில் கூட வருத்தமில்லை. அநியாயமாக ஊர் கெடுக என் பெயருக்கு வந்த காதல் கடிதத்தின் வாசகம் பாவி என் பெயர் கெட்டு விட்டது.

கல்யாணி விவாகம் ஆகி புருஷன் வீட்டுக்குக் கூடப் போய்விட்டாள். ஆனால் நான் தான்......என்னைப் பற்றிய வதந்திதான் எல்லோர் காதிலும் பட்டுத் தொலைகிறதே! எப்படிக் கல்யாணம் ஆகும்?

## 2. ராமச்சந்திரன்

அம்மாவும் நானுமாகத்தான் பெண் பார்க்கப் போனோம். பெண்ணின் பெயரே மிகவும் அழகாக இருந்தது. சுமங்களா என்னும் அப் பெயர் எனக்கு மிகவும் பிடித்தது. பெயரைப் போலப் பெண்ணும் அழகாய்த்தான் இருந்தாள். அம்மாவுக்கும் பெண் பிடித்துவிட்டதென்பது அவள் முகத்தினின்றே தெரிந்தது. அந்தப் பெண் பாடினாள். குரலும் இனிமையாக இருந்தது.

நாங்கள் அவ்வூர்ச் சத்திரம் ஒன்றில் இறங்கி யிருந்தோம். ஊருக்குப் போய்க் கடிதம் எழுதுவதாகச் சொல்லி விட்டுச் சத்திரத்திற்கு வந்தோம்.

"மங்களமா — சுமங்களமா? அவளைப் பார்க்க யாரோ வரப் போகிறானுமே!"

"அப்படியா? யாராவது வெளியூர்க் காரனோ!"

"பின்னே? உள்ளூர்ப் பையனாக இருந்தால்தான், அவள் சமாசாரம் தெரிந்திருக்குமே! கிட்ட நெருங்குவானா? அவளுக்குக் காதல் கடிதாச வந்ததுதான் உலகப் பிரசித்தமாகப் போய்ச் சந்தி சிரித்துக் கொண்டிருக்கிறதே!"

"அந்தச் சமாசாரம் அவ்வளவும் உண்மையாய் இருக்கும் என்று நினைக்கிறாயா, நீ?"

"நினைப்பதற்கு என்ன இருக்கிறது? ஏதோ இருக்கிறதனால்தானே, எல்லாரும் சொல்லிக் கொள்கிறார்கள்?"

சத்திரத்துத் திண்ணையில் உட்கார்ந்து இரண்டு பேர் பேசிக் கொண்டிருந்ததை நான் கேட்டேன். எனக்கு விஷயம் விளங்கி விட்டது.

"அம்மா, கேட்டாயா அவர்கள் பேச்சை? என்னசொல்கிறாய் இப்பொழுது?"

"என்னத்தைச் சொல்வது?"



"பெண்ணைப் பிடிக்க வில்லை என்று எழுதிவிட வேண்டியதுதானே?"

"எனக்கென்னவோப்பா, அந்தப் பெண்ணைப் பார்த்தால் அப்படி ஒன்றும் தோன்றவில்லை. அந்தப் பெண் உத்தமி என்று நான் எழுதிக் கொடுக்கவும் தயார். அவளுடைய பால் வடியும் களங்கமற்ற முகமே சொல்கிறதே?"

நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். அம்மாவும் விட்டுக் கொடுக்க வில்லை. ஊரார் பேசிக் கொள்வது முற்றும் கட்டுக் கதை என்று சாதித்தாள். கடைசியில் அவளது கட்சிதான் வெற்றி பெற்றது. நான் கல்யாணத்திற்குச் சம்மதித்து விட்டேன்.

கலியாண மெல்லாம் ஆகிவிட்டது. இப்போது தனிக் குடித்தனம்கூட ஆரம்பித்தாகிவிட்டது. இன்னும் அவள் விஷயம் எனக்கு விளங்காப் புதிராய்த்தான் இருக்கிறது. எவ்வளவோ தடவைகள் அந்தரங்கமாக அந்த வதந்தியைப் பற்றி அவளை விசாரித்துப் பார்த்து விட்டேன்.

"எனக்கு ஒன்றுமே தெரியாது" என்று ஒரேயடியாகச் சாதித்து வந்தாள் சுமங்களா.

நானும் விடாமல் எவ்வளவோ தரம் கேட்டுப் பார்த்து விட்டேன். 'ஒன்றுமே தெரியாது' என்று அவள் கூறுவதால் என் சந்தேகம் மேலும் வலுத்தது.

எவ்வளவு நான்தான் பொறுத்துப் பார்ப்பது? கடைசியில், அம்மாவிடம் தெளிவாகச் சொல்லி விட்டேன். "இனி உன் நாட்டுப் பெண்ணை நீயே பார்த்துக் கொள். அவள் உண்மையைச் சொன்னால் ஒழிய நான் அவளுடன் பேசுவதாக இல்லை."

சுமங்களா அழுதாள்; கண்ணீர் வடித்தாள், புலம்பினாள்.

நான் ஏன் விட்டுக் கொடுக்கிறேன்? அவளுடன் பேசுவதை நிறுத்தி ஏழெட்டு மாதம் ஆகிறது. அம்மாவுக்கு இன்னும் தன் அசட்டுத்தனம் புலப்படவில்லை.

## 3. பத்மநாபன்

வேடிக்கையான விஷயம்தான்! அந்தப் பெண் சுமங்களாவைப் பார்க்கப் போகிறேன் என்று எண்ணிக் கொண்டே பெட்டியிலிருந்து இறங்கினேன். ஸ்டேஷனுக்கு ராமச்சந்திரனே வந்திருந்தான்.

சிநேகிதர்களுள் நிஜமான சிநேகிதன்! வீட்டினுள் அழைத்துக் கொண்டு சென்று, அவனே கால் கை அலம்ப ஜலம் எடுத்துக் கொடுத்து, உபசாரமெல்லாம் செய்தான். இருவரும் சாப்பிட உட்கார்ந்தோம். இன்னும் அந்தக் காலத்தில் இருந்தாற்போல அம்மா, அம்மா என்று எதற்கெடுத்தாலும் அம்மாவைத்தான் அழைக்கிறான்.

அந்தப் பெண் சுமங்களா துவையல் எடுத்துக் கொண்டு வந்தாள். நான் அவளையே உற்று நோக்கினேன். அவளுடைய கண்களும் என்னைக் கவனித்தன. இருவருக்குமே சிறு அதிர்ச்சிதான்! நான் எப்படியோ சமாளித்துக் கொண்டேன். அவள் தந்தை எழுதிய கடிதம் முதல், எல்லா நிகழ்ச்சிகளும் என் கண்முன் தோன்றின.

நாங்கள் இருவரும் கவனித்துக்கொண்டதை ராமச்சந்திரனும் கவனித்தான்.

சாப்பாடு முடிந்ததும் நாங்கள் இருவரும் பேசுவதற்கு மொட்டை மாடிக்குச் சென்று அமர்ந்தோம். நிலா நாள் என்று பெயரே ஒழிய. மேகம் சந்திரனைப் பரிபூரணமாக மறைத்திருந்தது. சுமங்களா எங்கள் நடுவே வெற்றிலைத் தட்டை எடுத்துக் கொண்டு வந்து வைத்தாள்.

நான் தொடங்கினேன்: "நீ உன் மனைவியை எப்படி அழைக்கிறாய்?"

"அதை யெல்லாம் இப்பொழுது கிளப்பாதே பெரிய கதை!"

நான் திடுக்குற்று "என்ன?" என்றேன்.

"உனக்கு ஒன்றும் தெரியாது. நான் உன்னிடம் உண்மையைச் சொல்வதற்கென்ன?" என்று ஆரம்பித்தான்:

"கல்யாணத்திற்கு முன்னால், அவளுக்கு யாருடனோ தொடர்பு இருந்திருக்கிறது. அவன் இவளுக்கு ஏதோ கடிதம் எழுதி, அது விசுவரூபம் எடுத்து உலகப் பிரசித்தமாகப் போய்விட்டது. அம்மா வார்த்தைக்காக, இவளைக் கல்யாணம் பண்ணிக் கொண்டு விட்டேன். நான் இவளை மன்னித்துவிடத் தயாராய் இருக்கிறேன். நடந்தது என்ன என்று கேட்கிறேன். ஒன்றுமே இல்லை யென்று சாதிக்கிறாள். சரி, உனக்கும் எனக்கும் சம்பந்தம் ஒன்றுமே இல்லை என்று நான் கண்டிப்பாகச் சொல்லி விட்டேன். அவளோடு பேச்சு வார்த்தை யெல்லாம் நிறுத்திவிட்டேன்."

நான் அவன் சொன்னதைக் கேட்டு, அதிர்ச்சியுற்றுப் போனேன். ஏனென்றால், அந்தத் தம்பதிகளின் வாழ்வு கசந்ததற்குக் காரணம் நான்தானே? நான் சிறு பிள்ளைத் தனமாகச் செய்த காரியத்தின் விளைவை அப்போதுதான் கண்டேன். பழி வாங்கும் உணர்ச்சியில் செய்த காரியம் முதலுக்கே மோசம் செய்து கொண்டிருந்ததை நினைத்த போது எனக்கு வருத்தமாயிருந்தது.

நான் முழுக் கதையையும் ஆரம்பித்தேன்.

"ஒரு பெண் தன்னைப் பார்க்க வந்த பையனைத் தனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்க வில்லை என்று கடிதம் எழுதினால், அந்தப் பையனுக்கு எப்படி இருக்கும்? அவனுக் கென்ன மரியாதை அது? அதே கருத்தை, வேறு வார்த்தைகளில் 'சில அசௌகரியங் களினால்' என்று குறிப்பிட்டால் எவ்வளவு நன்றாய் இருக்கும்!"

"எனக் கொன்றுமே புரிய வில்லையே?" என்றான் ராமச்சந்திரன்.

"இதுதானப்பா, விஷயம். நான் உன் மனைவியை அப்போது பெண் பார்க்கப் போயிருந்தேன். இரண்டு நாள் கழித்து, பெண்ணுக்கு என்னைப் பிடிக்கவில்லை என்று கடிதம் வந்தது."

"அப்புறம்?"

"என்னை எப்படி மண்டையில் தட்டினாற் போல் இருந்திருக்கும்? நான் விடுவேனா? உடனே 'உனக்கு அவ்வளவு திமிரா?' என்று பழிக்குப் பழி வாங்கும் தோரணையில் அவள் பள்ளிக்கூடத்து விலாசத்துக்கு ஒரு காதல் கடிதம் எழுதிப் போட்டேன். அது இவ்வளவு பெரிய விபரீதமாகு மென்று அப் பொழுது நான் நினைக்கவில்லை."

ராமச்சந்திரனின் கண்கள் சுழன்றன.

"ஏன் விழிக்கிறாய்? போய் உடனே மனைவியை அழைத்துக் கொண்டு வா. என் னால் தானே உங்கள் பேச்சு வார்த்தை நின்றது? இப்போது என் எதிரிலேயே மீண்டும் பேச ஆரம்பித்து விடுங்கள்."

சுமங்களா அங்கு வந்து நின்றாள்.

"ராமச்சந்திரா, நான் கடிதம் எழுதியது பெரிய தப்பு என்று ஒப்புக் கொள்கிறேன். இருந்தாலும், அப்படி ஒரு புருஷனுக்குத் தர வேண்டிய மதிப்புக் கூட இல்லாமல், அவமானப் படுத்தினாற்போல் கடிதாசு எழு துவது நியாயமா, கேள், உன் மனைவியை!" என்றேன்.

"ஒரு பெண்ணிடம் பணம் காசு இல்லை என்பதனால், அவளுடைய அழகையும் மறந்து, பெண் பிடிக்கவில்லை என்று பொய்க் காரணம் எழுதுவது சரியா என்று உங்கள் சிநேகிதரைக் கேளுங்கள்" என் றாள் சுமங்களா.

நான் விழித்தேன், விஷயம் விளங்காமல்.

"என் சிநேகிதி கல்யாணி என்ற பெண் ணைத்தான் சொல்கிறேன்" என்றாள் அவள்.

எனக்கு நினைவு வந்தது. உடனே உண் மையை எடுத்துச் சொன்னேன்: "எனக் குத் தாழ்வு மனப்பான்மை இருக்கிற



கணவன்:—நீ வெளியிலே போய் விட்டு தர்மராஜன் தெருவழியாகத் தானே திரும்புவாய்?

மனைவி:—ஆமாம்! ஏன்?

கணவன்:—அந்தத் தெருவிலே புடவைக் கடை ஒன்று புதிதாகத் திறந்திருக்கிறது. அதற்குள் நுழையா மல், விடு வந்து சேர்!

---

தென்று வேண்டுமானாலும் நினைத்துக் கொள்ளட்டும். அந்தப் பெண் அழகில் என்னை யெல்லாம் விட ரொம்ப உயர்வு என்று எனக்குத் தோன்றியது. நமக்குச் சரியான பெண் போதும் என்று நான் நினைத்தேன். அதனால், அவளை நான் கல் யாணம் பண்ணிக் கொள்ள விரும்பவில்லை. இருந்தாலும், கடிதாசில் அப்பட்டமாக 'என்னைவிட, பெண் ரொம்ப அழகாய் இருப்பதனால், வேண்டாம்' என்று எழுது வானா ஒருவன்? நாசூக்காக 'பிடிக்கவில்லை' என்றெழுதினேன்."

சுமங்களாவின் கண்களில் இரு துளி நீர் தெரிந்தது. ராமச்சந்திரன் ஆசையோடு சுமங்களாவை நோக்கினான்.

"நன்றாய்த் தெரிகிறது நிலா, இப் பொழுது பார். மேகமும் நன்றாக விலகி விட்டது" என்று நான், அப்பொழுது மேக ராசியினின்று வெளியே வந்து தலையை நீட்டிக் கொண்டிருந்த சந்திரனைப் பார்த்துக் கொண்டே சொன்னேன்!

# மலரும் மணமும்

எஸ். வி. எஸ்.

நான் சின்னஞ்சிறு பாலகனாக இருந்த போது, மாலை நாலரை மணிக்குப் பள்ளிச் சிறையிலிருந்து விடுபட்டு வெகு வேகமாக வீட்டை நோக்கி ஓடி வருவேன். என் புஸ்தக அலமாரியில் என் புஸ்தகங்களை வீசி எறிவேன். "அம்மா, இன்னிக்கு ஏதாகிலும் டிபன் உண்டா?" என்று கேட்பேன். "சீடை பண்ணி யிருக்கிறேன்" என்பாள். அதை வாங்கி அவசர அவசரமாகக் கொரித்துக் கொண்டே வெளியில் என் சகாக்களுடன் விளையாட ஓடுவேன். அந்த சமயம் பார்த்து, என் அக்கா, "டேய் பாபு, கடைத்தெருவுக்குப் போய் இரண்டு முழம் மல்லிகைப் பூ வாங்கிக்கொண்டு வாடா!" என்பாள்.

"நான் மாட்டேன், போ! எனக்கு விளையாடப் போகணும்" என்பேன்.

உடனே, அம்மா, அத்தை, பாட்டி எல்லாரும் எரிந்து விழுவார்கள். "ஏண்டா அக்கா பூ வாங்கிக் கொண்டுவா என்றால் மாட்டேன்கிறாயே! அசத்து! அப்படி என்னடா விளையாட்டு? பூ வாங்கிக் கொடுத்து விட்டுத்தான் வெளியே போகணும். இல்லை என்றால், ராத்திரி அப்பா வந்ததும் சொல்லி விடுவோம்!" என்பார்கள்.

அப்பொழுது அவர்கள் மேல் எல்லாம் ஆத்திரம் ஆத்திரமாக வரும். என் அக்காவின்மேல் வரும் கோபத்தில் 'அவள் ஏன் இங்கு வந்து தொலைந்தாள்; தன் புக்ககத்திலேயே இருக்கப்படாதோ' என்று நினைப்பேன். அதுமட்டுமில்லை, 'மல்லிகைப்பூ என்று எதற்குத்தான் இருக்கிறதோ? இதையும் கடவுள் எதற்குத்தான் படைத்தாரோ, பொழுது போகாமல்' என்று வேறு மனசுக்குள் நினைத்துக் கொள்வேன்.

★

இப்படிப் பல சம்பவங்கள் சேர்ந்து எனக்குப் புஷ்பம் என்றாலே வெறுப்பை உண்டாக்கி விட்டன. எனக்கு வயது வந்த பிறகும் அது நிலைத்து விட்டது.

ஒரு சுமங்கலிக்கு ஒரு முழம் புஷ்பம் வாங்கிக் கொடுப்பது என்றால் எனக்குப் பிடிக்காது; கோவிலுக்குக் கொஞ்சம் புஷ்பம் கொண்டு போய் சுவாமிக்குச் சாத்தலாம் என்று கூறிவிட்டால், அவர்களை எனக்குக் கட்டோடு பிடிக்காது. பிறகு கொஞ்ச நாட்களில் நான் நம் சமுதாயத்தில் அந்தஸ்துள்ள மனிதனாகப் போய் விட்டேன். அதனால் நான் எங்கேயாகிலும் வெளியூர் போனால் நண்பர்கள் எனக்கு மாலை போட்டு வழி அனுப்புவார்கள்; வெளியூரிலிருந்து திரும்பி வந்தால் மாலை போட்டு வரவேற்பார்கள். அப்பொழுதெல்லாம் எனக்குப் புஷ்பமாலைகள் மீதுள்ள அருவருப்பைப் பரிபூரணமாகக் காட்டி விடுவேன்.

அன்றைக்கொருநாள் ஒரு இளைஞர் சங்கக் காரியதரிசி என்னைத் தங்கள் சங்கத்தில் வந்து பிரசங்கம் செய்யும்படி கேட்டுக் கொண்டார். நான் ஒரு 'கண்டிஷன்' மீது பேச ஒப்புக் கொண்டேன். "உங்கள் சங்கத்துக்குப் பேச வந்தால் எனக்கு மாலை போடுவதில்லை என்று உத்திரவாதம் அளித்தால் வருகிறேன்" என்று கூறினேன். அதற்கு அவர் ஒப்புக் கொள்ளவே நான் அந்தச் சங்கத்துக்குப் போய், எனக்குப் புஷ்பங்களின் மீதுள்ள அருவருப்பைப் பற்றியே பேசித் தீர்த்தேன். நம்மவர்கள் எதற்கெடுத்தாலும் புஷ்பங்களை உபயோகப் படுத்துவதையும், வருகிறவர்கள் போகிறவர்கள் எல்லாருக்கும் மாலை போடுவதையும் வன்மையாகக் கண்டித்தேன்.

இப்படி யிருந்த எனக்கு ஒருநாள் கல்யாணமாயிற்று.

நான் என் மனைவியிடம் எல்லையற்ற அன்பு கொண்டிருந்தேன்.

அவளும் என்மேல் எவ்வளவோ அன்பு கொண்டிருந்தாள்.

ஒரு தடவை அவளுக்கு ஒரு வைர நெக்லெஸ் வாங்கி வந்தேன். அவள் சற்றும் எதிர்பாராத சமயத்தில் இவ்வளவு பெரிய பரிசைக் கொடுத்தால் அவள் அப்படியே பிரமித்துப் போவாள். சந்தோஷத்தில் முகமெல்லாம் மலரும். அப்பொழுது அவள் அழகு ஒன்றுக்கு நூறு மடங்கு ஆகிவிடும்!—என்றெல்லாம் எண்ணிக் குதூகலத்துடன் வந்து கொண்டிருந்தேன்.

வீட்டுக்குள் நுழைந்ததும் என் மனைவியைக் கூப்பிட்டு நெக்லெஸ் பெட்டியைக் கொடுத்தேன். அவள் அதைப் பார்த்ததும் சந்தோஷமடைந்தாள். ஆனால் அந்தச் சந்தோஷம் அதிக நேரம் நீடிக்கவில்லை. அவள் மனம் கூம்பிவிட்டது. அதைப் பார்க்க என் மனமும் சஞ்சலமுற்றது.

இப்படி எத்தனையோ வைர நகைகள், தங்க ஆபரணங்கள், வெள்ளிச் சாமான்கள் வாங்கிப் பரிசளித்திருக்கிறேன். அப்போதெல்லாம் அவள் மகிழ்ச்சி நீர்க்குமிழி

யின் ஆயுட்காலந்தான் அவள் முகத்தில் நிலவும். இந்த நிலைமைக்குக் காரணம் புரியாமல் தவித்துக் கொண்டிருந்தேன்.

ஒரு நாள் மாலை என் காரில் வீட்டுக்கு வந்தேன். என் கார் வரும் சத்தம் கேட்டு, என் மனைவி வீட்டு 'போர்ட்டிகோ'வில் வந்து நின்றுகொண்டாள். அவளைப் பார்த்ததும் எனக்கு மகிழ்ச்சி யுண்டாயிற்று. அவளும் என்னைப் புன்முறுவலுடன் வரவேற்றாள்.

நான் காரை விட்டு இறங்கினேன். அடுத்த கணம், என் டிரைவர் எனக்குப் போடப்பட்ட ரோஜா மாலையுடன் என் பின்னால் வந்தான்.

ரோஜா மலரைக் கண்டவுடன் அவள் முகத்தில்தான் எத்தகைய மலர்ச்சி காணப்பட்டது! எவ்வளவு ஆவலுடன் அதை டிரைவர் கையிலிருந்து வாங்கிக் கொண்டாள்! "நீங்களே வாங்கி வந்தீர்களா? அல்லது உங்களுக்கு யாராகிலும் மாலை போட்டார்களா?" — இப்படி எத்தனை ஆர்வமும் ஆசையும் கலந்த கேள்விகள் கேட்டாள். அன்றைக்கெல்லாம் அவள் ஒரே ஆனந்த வாரிதியில் மிதந்தாள்.

அன்றைக்குப் புரிந்தது, என் வைர நெக்லெஸும் தங்க நகைகளும் ஏன் தோற்றுப்போயின என்பதன் காரணம்.

★

இப்பொழுதெல்லாம் யாராகிலும் எனக்கு மாலை போட்டால் நான் வெறுப்பதில்லை. யாராகிலும் பிரசங்கம் செய்யக் கூப்பிட்டால் மலர்களின் மேன்மையைப் பற்றியே பேசுகிறேன். கோவிலுக்குச் சென்றாலும், "ஆண்டவனே, உன்னுடைய சிருஷ்டிகள் அனந்தம், அவைகள் எல்லாவற்றையும்விட மிகச் சிறந்தது புஷ்பம்" என்று சொல்லி மலர்மாலை சாத்துகிறேன்.

இப்பொழுது எல்லாம் நான் தவறினாலும் தவறும், என் மனைவிக்கு ஒரு முழம் பூவாகிலும் வாங்கிக் கொண்டு வீட்டுக்குப் போவது தவறுவதில்லை.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரசாமி

## 43. சர்வாங்காசனமும், யானைக் காலும்

யானைக்கால் ஒருவிதக் கிருமியினால் உண்டாவது. முக்கியமாய் ஜலத்தின் மூலமே இது பரவுகிறது. சில இடங்களில் உள்ளவர்களுக்கு அனேகமாய் இந்த வியாதி இருப்பதைப் பார்க்கலாம். காரணம், அங்குள்ள ஜலத்தில் இதன் கிருமிகள் இருப்பதுதான். இந்த ஜலத்தையே உபயோகிக்கும் ஒரு சிலருக்கு இந் நோய் வருவதில்லை. அவர்களுக்கு இந்த நோய்க் கிருமிகளை எதிர்த்து நிற்கும் சக்தி அதிகமாய் இருக்கலாம்.

முதலில் ஜுரத்தில் ஆரம்பிக்கும். அடிக்கடி ஜுரம் வரும். பிறகு ஒரு நாள் பார்த்தால், கால் சற்றுக் கனத்திருக்கும். அதற்கு எந்த மருந்தும் எடுக்காது. காசு செலவு செய்து மருந்துகளும், ஊசிகளும் போடுவதுதான் மிச்சம். நாளுக்கு நாள் கால் வீங்கிக் கொண்டே போகும். அடிக்கடி ஜுரமும் வரும். சிலருக்கு வாரம் வாரம் வரும். சிலருக்கு மாதமிருமுறை வரும். சிலருக்கு மாதம் ஒரு முறை வரும். மாதம் தப்பினாலும் தப்பலாம். ஜுரம் வருவது தப்பாது. தீராத வியாதி இது. நாட்டு வைத்தியம், ஆங்கில வைத்தியம், யூனானி வைத்தியம் மற்றும் என்னென்ன வைத்தியங்களெல்லாம் உண்டோ, அவற்றையெல்லாம் செய்து பார்த்தும் குணமடையாதவர்கள் பலரைக் கண்டிருக்கிறேன். சிலருக்கு யானைக் கால் மட்டும் அல்ல. யானைக் கைகூட உண்டாவதுண்டு. கால் கனத்து விடுவதைப்போலக் கையும் கனத்து விடும்.

இந்த வியாதியின் ஆரம்ப நிலையிலுள்ளவர்கள் சர்வாங்காசனம் செய்தால் குணமாகும். ஜுரம் வராது. காலும் வற்றும். ஆனால் மிகவும் முதிர்ந்து, கால் மிகப் பருத்தும் போனவர்கள் செய்தால் இன்னும் பருத்து விகாரமாகாமல் இருக்கும். வழக்கமாய் வரும் ஜுரம் வராது. ஆனால் கால் என்னமோ அப்படியேதான் இருக்கும்.

சென்னையில் ஒரு வியாபாரி. வயது 62. யானைக்கால் வந்து 10, 12 வருடங்கள் ஆகி இருந்தது. எத்தனையோ மருந்து! எத்தனை எத்தனையோ ஊசிகள்! எல்லாம் ஒரு கை பார்த்தாகிவிட்டது! பல ஆயிரம் செலவழித்தும் பலன் கிட்டவில்லை. மாதம் தவறாமல் ஜுரம் வந்து கொண்டிருந்தது. ஒரு தடவை நான் கோகலே ஹாலில் ஆசனங்கள் செய்து காட்டி, அதன் குணங்களை விளக்கினேன். அக்கூட்டத்திற்கு அந்தக் கனவான் வந்திருந்தாராம். சர்வாங்காசன மகிமையைக் கேட்டு, வீட்டிற்குச் சென்றதும் அதைச் செய்து பார்த்தாராம். சரியாகச் செய்ய வரவே, விடாமல் அதைச் செய்திருக்கிறார். நாளுக்கு நாள் உடலில் ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டது. கால் வீக்கம் குறைவதாய்த் தெரிந்தது. வழக்கமாக வரும் ஜுரமும் வரவில்லை. இன்னும் ஊக்கத்துடன் அதிக நேரம் செய்ய ஆரம்பித்தார். கால் நன்றாக வடிந்தே விட்டது. பிறகு ஒரு நாள் அதாவது 6 மாதங்களுக்குப் பின் இந்தச்

சந்தோஷ சமாசாரத்தைத் தெரிவித்துப் போக என்னிடம் வந்தார்.

**குதிகால் வலி** :—குதிகால் வலி வந்தவர்கள் குதிகாலை நன்றாக ஊன்றி நடக்கவே மாட்டார்கள். அப்படி ஊன்றினால் உள்ளே ஏதோ எலும்பு குத்துவதுபோல ஒருவிதக் குத்து வலி எடுக்கும். சிலரால் காலையில் படுக்கையை விட்டு எழுந்ததும் கால் ஊன்றி நடக்கவே முடியாது. என்ன வைத்தியம் செய்து கொண்டாலும் பூரண குணம் கிட்டாது. இதற்கும் சர்வாங்காசனமே ஏற்ற மருந்து.

**கால், பாதம் இவற்றில் வீக்கம்** :—ஒரு அம்மையாருக்கு 10 வருடங்களாக ஒரு காலில் மட்டும் வீக்கமாம். அது பிரசவ சமயத்தில் ஏற்பட்டதாம். வற்றவே யில்லையாம். சிறிது தூரம் நடந்தால் இன்னும் வீங்கிக் கொள்ளுமாம். குத்தலும் குடைச்சலும் அதிகமாகி விடுமாம். ஒத்தடங்கள், தைலங்கள், ஊசிகள் மருந்துகள் ஒன்றும் குணம் அளிக்கவில்லை. எப்படியோ ஆசன மகிமையைக் கேள்விப்பட்டு சிகிச்சைக்காக வந்தார். அவருக்கு வயது 40 இருக்கும். அவரால் தனித்து நின்று சர்வாங்காசனம் செய்ய முடியவில்லை. சுவரின் உதவியைக் கொண்டு செய்யுமாறு சொன்னேன். அந்த அம்மையார் இரண்டு மாதங்களுக்குப் பின் வந்து, 'முக்கால் பங்கு குணமாகிவிட்டது. வீட்டில் இப்பொழுது நடமாடி வேலை செய்கிறேன்' என்று சொன்னார். இன்னும் நேரத்தை அதிகரித்து 10, 15 நிமிஷங்கள் வரை செய்யச் சொன்னேன்.

**முழங்கால் வாயுப் பிடிப்பு (Rheumatism)** இது பரம்பரை வியாதி என்று சொல்லுவர். நாற்பது வயதானவர்களுக்கு, அவர்கள் குடும்பத்தில் இந்த வியாதி முன்பு இருந்திருந்தால் வருவது சகஜம். ஆனால் இந்தக் காலத்தில் அப்படி யில்லாமல் புதிதாகவும் வருகிறது. சிறு வயதினருக்கும்கூட வருகிறது. உட்கார்ந்தால் எழுந்திருக்க முடியாது. எழுந்தால் உட்கார முடியாது. நடந்தால் சரியாக நடக்க வராது. பத்து அடி வைத்த பின்தான் சரியாக நடக்க வரும். சிலர் கீழே உட்கார முடியாமல் நாற்காலிகளிலும், திண்ணைகளிலும் உட்காருவார்கள். இவர்கள் காலையும் மாலையும் தவறாமல் சர்வாங்காசனம் செய்தால் கட்டாயம் குணம் காணலாம்.



" இங்கேயிருந்து அடுத்த ஊருக்குத் தினம் நான் டிக்கெட்டு வாங்காமலே போகிறேன் !"

" அப்படியா ? நீர் ரொம்ப தாளாக ரயில்வேக்காரர்களை ஏமாற்றி வருகிறீர் என்று சொல்லும் !"

" இல்லை, இல்லை ! நான் தினம் நடந்தல்லவா போகிறேன் ?"

நமது உடலில் சதா ஆக்க வேலையும், அழிவு வேலையும் நடந்து கொண்டே இருக்கின்றன. பல அவயவங்கள் இவைகளுக்காக ஏற்பட்டு அதை நடத்திக்கொண்டிருக்கின்றன. இந்த வேலைகளை நடத்தும் அவயவங்களையெல்லாம் ஆண்டு அடக்கி ஆளும் ஒரு அவயவம் இருக்கிறது. அதுதான் தைராய்ட். தைராய்ட் கோளமானது தன் ஆட்சியை நேரடியாகச் சிறுநீர் பிரித்தி (Kidneys) மேல் செலுத்துகிறது. ஆகாரப் பிசகினாலும் நடத்தைக் கோளாறினாலும், தேகப் பயிற்சியின் அசட்டையினாலும், தைராய்ட் கெடுகிறது. நரம்புகள் பலவீனமடைகின்றன. சிறு நீர் பிரித்தியும் தன் வேலையைச் சரிவரச் செய்ய முடியாமல் தடுமாறுகிறது.

மூத்திரக்காய் சாக்கடை நீர் சுத்தம் செய்யும் ஒரு யந்திரம் போன்றது. சரீரம் முழுவதற்கும் பாய்ந்தோடி வரும் ரத்தம் முதலில் மூத்திரக்காய்க்கு வருகிறது. ரத்தத்திலுள்ள வேண்டாத வஸ்துக்களை யெல்லாம் பிரித்து மூத்திரப் பைக்கு அனுப்புகிறது. அதன் பின் அந்த ரத்தம் இருதயத்திற்குச் செல்லுகிறது. அவ்வளவு முக்கியமான வேலையைச் செய்யும் கருவியை எவ்வளவு ஜாக்கிரதையுடன் காப்பாற்ற வேண்டும்! பல காரணங்களால் கெடுறச் செய்கிறோம். அப்படி அது பலவீனப்படும்போது இரத்தத்திலுள்ள துர்நீர் சரியாக அகற்றப்படாமல் அப்படியே இரத்தத்துடன் செல்லுகிறது. மறுபடி அது சரீரம் முழுவதும் பரவுகிறது. பரவி வரும்போது மூட்டுக்களில் சாதாரணமாய்த் தங்கி விடுகிறது. அதுவும் பூமியின் ஆகர்ஷண சக்தி அதைக் கீழ்ப்பாகம் இழுத்து, கணுக்கால், குதிகால், மூட்டி, பாதம் இம்மாதிரி இடங்களில் தங்கச் செய்கிறது. அதுதான் இம்மாதிரி வலிகளுக்குக் காரணம்.

சர்வாங்காசனம் செய்யும் போது மூன்று காரியங்கள் நடைபெறுகின்றன. 1, தைராய்ட் பலம் பெறுகிறது. 2. சர்வாங்காசன நிலையில் கால்பாகம் மேலே இருப்பதால் அங்குள்ள கெட்ட நீரை பூமியின் ஆகர்ஷண சக்தி கீழே இழுத்துக் கலந்து, ரத்தத்துடன் சேர்க்கிறது. 3. தைராய்ட் மூலம் பலம் அடைந்த மூத்திரக்காய்கள் அதைவடிகட்டி வெளியேற்றுகின்றன.

இவைகள் எல்லாம் ஒரே நாளில் நடப்பதல்ல. பல நாள், பல மாதங்கள், காலையும் மாலையும் சர்வாங்காசனத்தைச் செய்தால்தான் பலன் தெரியும். தினம் 10 நிமிஷம் முதல் 20 நிமிஷங்கள் வரை செய்ய வேண்டும். (தொடரும்)




# கண்ணாமூச்சி

கௌசிகன்

"அது யார், ரேணுகா! புதிசாக இருக்கிறதே!" என்று கேட்டாள் வஸந்தா.

"ஓ! அவரைக் கேட்கிறாயா! அவர் என் அண்ணாவின் நண்பர். வேணு என்று பெயர். இரண்டு பேரும் ஒரே அறையில் இருந்து கொண்டு, இவர் வைத்தியக் கல்லூரியிலும் அண்ணா சட்டக் கல்லூரியிலும் படித்தார்களாம்!"

வேணு கூடத்திலுள்ள ஸோபாவில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்திருந்தான். அவன் முகத்தை ஒரு சிவப்பு அட்டைப் புத்தகம் மறைத்துக் கொண்டிருந்தது. ரேணுவின் அறையிலிருந்து வேணு உட்கார்ந்திருப்பது நன்றாகத் தெரிந்தது.

"என்னடி, வஸந்தா! அவரை அப்படியே விழுங்கி விடுபவள் போலப் பார்க்கிறாயே! அவருக்கு இன்னும் கலியாணம் ஆகவில்லை. வா, உன்னை நானே அவருக்கு அறிமுகப்படுத்தி விடுகிறேன். அப்புறம் அவர் முகத்தைப் பார்த்துக் கொண்டு அவர் எதிரில் உட்கார்ந்திருக்கலாம்."

"போடி ரேணு...சீச்சீ...விடுடி கையை... எப்பவும் உனக்கு விளையாட்டுத்தான்!"

ஆனால் ரேணுகா வஸந்தாவின் கையை விடவுமில்லை. அவள் வார்த்தையைக் கேட்கவுமில்லை. "வேணு ஸார்" என்று அழைத்துத் தன் தோழியை முறைப்படி அறிமுகம் செய்து வைத்துவிட்டுத் தான் நகர்ந்தாள்.

வஸந்தாவும் தன்னை இன்பத் தொல்லையில் சிக்கவைத்துவிட்டுப் போன ரேணுவை மனத்தில் சபித்துக் கொண்டே வேணுவுடன் சிரித்துச் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தாள்.

வஸந்தாவும் ரேணுகாவும் காலேஜ் மாணவிகள். தோழிகள். வஸந்தா ஹாஸ்டலில் இருந்தாள். ரேணுகாவுக்கு அதே ஊரில் தான் வீடு. ரேணுகா நல்ல பணக்காரி. கொஞ்சம் அழகும் அதிகம். அதோடு கர்வமும் கொஞ்சம் உண்டு. ஆனால் வசந்தாவிடத்தில் அவள் தன் கர்வத்தைக் காட்டுவதில்லை.

வஸந்தாவும் அழகுதான். இருந்தாலும் ரேணுகாவுக்கும் அவளுக்கும் எவ்வளவோ வித்தியாசம். ரேணுகா மின்சார டியூப் லைட் என்றால் வஸந்தா பளபள வென்று நன்றாகத் தேய்த்துக் குங்குமமிட்டு ஏற்றி வைத்திருக்கும் குத்து விளக்கு.

வேணுவின் நினைவில் தன் மனத்தைப் பறி கொடுத்துவிட்ட வஸந்தா அன்றிரவு படிக்கவும் இல்லை; தூங்கவும் இல்லை. பொழுது விடிந்தால் வேணுவைப் பற்றி ரேணுகாவிடம் தீர விசாரித்துத் தெரிந்துகொள்ள வேண்டும் என்று முடிவு கட்டினாள்.

இரவு கழிந்து பகல் வந்தது. ரேணுகா வரமாட்டாளா என்று தவிக்க ஆரம்பித்தது வஸந்தாவின் மனம். ரேணுகாவும் வந்தாள். வரும்போதே அவள், "அடி, வஸந்தா, நீ பலே கைகாரி. பூனைபோல இருக்கிறாயே, ஒன்றும் தெரியாத அப்பாவி என்று நினைத்தேன். இப்பொழுதல்லவா தெரிகிறது!" என்று ஆர்ப்பாட்டத்துடன் கேட்டுக் கொண்டே வந்தாள்.

வஸந்தாவுக்குப் படபடப்பும் துடிதுடிப்பும் அதிகமாயிற்று. "என்னடி, ரேணு! வரும்போதே குற்றச்சாட்டு பலமாக இருக்கிறதே!" என்றாள்.

"என்னவா! நேற்று உனக்கு அறிமுகம் செய்து வைத்தேனே, வேணு! அவரைப் பற்றித்தான்!"

"அவரைப் பற்றி என்ன!"

"என்னவா! நேற்று நீ வந்துவிட்டுப் போனது முதல் உன்னைப்பற்றியேதான் பேசிக் கொண்டிருக்கிறார். நேற்று ராத்திரி சாப்பாட்டின்போது கூட 'உங்கள் தோழி வஸந்தாவிற்கு அவியல் என்றால் ரொம்பப் பிடிக்குமாமே!' என்று எங்கள் வீட்டு அவியலை ரஸிக்கும்போது மறக்காமல் உன்னை ஞாபகப் படுத்திக்கொண்டார்."

"அதுதானா நேற்று எனக்குக் கூட புரை ஏறிற்று! போடி, குறும்புக்காரி!" என்று சொல்லிக் கொண்டே வஸந்தா கண்ணாடி முன் நின்று முகத்தைச் சாய்த்துக் கொண்டு தன் அழகைத் தானே பார்த்துக் கொண்டாள். கைச் சிப்பு நெற்றியில் சுருண்டு விழும் கேசத்தை ஒதுக்கிவிட்டது. முகத்தில் ஒரே மந்தஹாசம். இதழ்க் கோடியில் வெட்கம் கலந்த விஷமச் சிரிப்பு. "நிஜமாகவா அவர்

என்னைப் பற்றிப் பேசினார்!'' என்று கேட்டாள். ஆனால் அவளுடைய தன்னும் உள்ளம் 'அவர் நிஜமாகவே என்னைப் பற்றிப் பேசி இருக்க வேண்டும். ரேணுவின் வார்த்தை கேலியாக இருக்கக்கூடாது' என்று துடித்தது.

''நான் எதற்காகப் பொய் சொல்லவேண்டும்! இருந்தாலும் நீ ஆண்கள் மேல் இப்படிச் சொக்குப் பொடி தூவுவாய் என்று தெரிந்திருந்தால் நான் உன்னை அவருக்கு அறிமுகம் செய்து வைத்திருக்கவே மாட்டேன்!''

இதை ரேணுகா சிரித்துக் கொண்டேதான் சொன்னாள். ஆனாலும் சிரிப்பின் பின்னால் கொஞ்சம் மனத்தாங்கலும் இருக்கத்தான் செய்தது.

தன் தோள் வழியாக வழிந்து கிடந்த கூந்தலை வெகு வேகமாக வஸந்தாவின் கைகள் பின்னிக் கொண்டிருந்தன. அவள் மனத்திலே குமிழியிடும் வேணுவின் நினைவைக் கைகளின் வேகம் எடுத்துக் காட்டியது.

''ரேணு, உங்க அண்ணாவின் சினேகிதருக்கு எந்த ஊராம்! ரொம்பத் தமாஷாகப் பேசுவார் போலிருக்கிறதே! எனக்கு ரேணு கிடைத்தாற் போல் உன் அண்ணாவுக்கு வேணு கிடைத்திருக்கிறார். உன் அண்ணா அதிர்ஷ்டக்காரர் தான்'' என்று பேச்சுக் கொடுத்துக்கொண்டே டிரஸ் செய்துகொள்ள ஆரம்பித்தாள் வஸந்தா.



''என் அண்ணா அவரைப் பற்றிச் சொன்னதைக் கேட்டாயானால் நீ திகைத்தே போய் விடுவாய்!''

''அது என்ன, அப்படிப்பட்ட அதிசய சமாசாரம்!''

''வேணு கொஞ்ச நேரம் கூடச் சும்மா உட்கார்ந்திருக்க மாட்டாராம். ஓட்டம், நீச்சல் என்றால் ரொம்பப் பிடிக்குமாம் அவருக்கு. தினம் காலையிலும் மாலையிலும் ஐந்து மைலுக்குக் குறையாமல் ஓடிவிட்டு வந்துதான் சாப்பிடுவாராம். மலை மேலே ஏறுவது ஒரு கலை என்று என்னிடமே சொன்னார். நம் ஊர் மலை மேலே இதோடு இரண்டு தடவை ஏறி விட்டாராம்!''

''என்ன வேங்கிமலை மேலேயா!''

''ஆமாம், தினம் அவர் எழுந்ததும் செய்கிற தேகாப்பியாசங்களைப் பார்த்தால் பயந்தே போய்விடுவாய்.''

''டாக்டர் தொழிலில் வரும்படி இல்லாவிட்டால் அவர் சர்க்கஸில் சேர்ந்துவிடலாம் என்று சொல்லு'' என்றாள் வஸந்தா.

அன்று வகுப்பில் வஸந்தாவுக்குப் பாடத்தில் மனது செல்லவே இல்லை. ரேணுகா சொன்ன விஷயங்களைக் கேட்டபின், அவள் எண்ணக் கோட்டைகள் தகரலாயின. ஏனெனில் வஸந்தாவைப் போல் முழுச் சோம்பேறி அந்தக் கலாசாலையிலேயே கிடையாது. சோம்பேறி என்றால் படிப்பில் இல்லை. விளையாட்டில்தான். கொஞ்சநேரம் வெய்யிலில் நின்றால் அவளுக்குத் தலை வலிக்க ஆரம்பித்து விடும். உடல் நலுங்காமல் நிழலில் உட்கார்ந்து கொண்டு புத்தகம் படிப்பதுதான் அவளுக்குப் பிடித்தமான விளையாட்டு.

அன்று வகுப்பு முடிவதற்குள்ளேயே வஸந்தா ஒரு நிச்சயமான முடிவுக்கு வந்து விட்டாள். அன்று மாலை தன்னையும் விளையாட்டில் சேர்த்துக்கொள்ளும்படி வஸந்தாவே வலிய வந்து கேட்டபொழுது தோழிகளுக்கு ஒரே வியப்பாகப் போய்விட்டது.

திடீர்த் தேகாப்பியாசம் வஸந்தாவுக்கு உடலில் தாங்க முடியாத வலியைக் கொடுத்தது. காலைத் தூக்கி வைத்து நடக்க முடியாமல் கட்டிக் கொண்டது. இருந்தாலும் வஸந்தா பயிற்சியை விடவில்லை. காரணம் வேணுவின் நினைவுதான். சிற்சில சமயம் இது என்ன பைத்தியக்காரத் தனம் என்று எண்ணுவாள். ஆனால் அவள் செய்கைகள் மாறவில்லை.

* * *

''வஸந்தாவா! வா, உனக்கு ஆயுசு நூறு! இப்பொழுதுதான் காரை உன்னை வந்து கூட்டிக்கொண்டு வரவேண்டும் என்று கார் எடுக்கச் சொன்னேன். அவர்கூட உங்கள் சினேகிதி என்ன அப்புறம் வரவே இல்லையே என்று கேட்டார்!'' என்றாள் ரேணுகா கண்ணைச் சிமிட்டியபடியே.

''இந்த ஞாயிற்றுக்கிழமை வேங்கி மலைக்குப் போய் வருவோமா! இந்த ஊரில் அது பார்க்கவேண்டிய இடம் என்று சுந்தரம் சொன்னான். மலைமேலே ஒரு புராதனக் கோட்டைகூட இருக்கிறதாமே!'' என்று

சொல்லிக் கொண்டே வந்து உட்கார்ந்தான் வேணு.

"நீங்கள்தான் இரண்டு தடவை ஏறிவிட்டீர்கள் என்று ரேணுகா சொன்னாளே" என்று கேட்டுவிடுவாளோ என்று நினைத்தாள். ஆனால் ஏனோ கேட்கவில்லை! "ரேணுவும் வருகிறாளோ!" என்று கேட்டாள்.

"ரேணுகாவைக் கேட்டேன். அவளுக்கு ஞாயிற்றுக்கிழமை ஏதோ முக்கிய காரியம் இருக்கிறதாம். சுந்தரம் கூடக் கிராமத்துக்குப் போயிருக்கிறான். உங்களைப்பற்றி ரேணுகா ரொம்பச் சொல்லி இருக்கிறாள். அதனால்தான் இந்த ஞாயிற்றுக்கிழமை மலைக்குப் போகலாமா என்று கேட்டேன்!"

அவளுக்கு அவன் பேச்சு கபடமற்ற குழந்தை பேசுவதுபோல இருந்தது.

'தனியாகவா! அவருடன் தனியாகவா!' அதை நினைத்தபோது அவளுக்கு ஒரே ஆனந்தமாகத்தான் இருந்தது. இருந்தாலும் இடையிடையே வெட்கமும் பயமும் வாட்டின.

"அதற்கென்ன! போனால் போகிறது! எனக்கும் மலை ஏறுவதென்றால் பிடிக்கும்" என்றாள். 'எத்தனை பெரிய பச்சைப் பொய்!' என்று குத்திற்று உள்ளே ஏதோ ஒன்று.

"இங்கிருந்து மூன்று மைல்தானே வெங்கிமலை!"

"ஆமாம், பஸ்கூடப் போகிறது" என்று லேசாக பஸ்ஸிலும் போகலாம் என்பதை வஸந்தா ஞாபகப்படுத்தினாள்.

"பஸ் எதற்கு! சென்னையில் படித்தபோது பஸ் ஏறி ஏறி வெறுத்துப் போய்விட்டது. மூன்று மைல்கள்தானே! நடந்தே போய் விட்டால் போகிறது! அதிகாலையிலேயே கிளம்பினால் நடப்பதில் சிரமம் தெரியாது. ஆனந்தமாக இருக்கும்" என்றான் வேணு.

வஸந்தா ஞாயிற்றுக் கிழமைத் திட்டத்தை ரேணுகாவிடம் சொன்னபோது அவள் "உன் பாடு குஷிதான், போ! பிரயாணத்துக்குக் கொஞ்சம் இட்டிலிகளும் வாங்கிக் கொண்டு போ!" என்று குறும்புடன் கூறி வஸந்தாவின் கன்னத்தைச் செல்லமாக இழைத்தாள்.

ஞாயிற்றுக்கிழமை வஸந்தா தன் தோழி சொன்னதுபோல இட்டிலிகளை மட்டும் வாங்கிக் கட்டிக் கொள்ளவில்லை. ஆஸ்ப்ரோ, அமிர்தாஞ்சனம் இவைகளையும் மறக்காமல் எடுத்துக் கொண்டாள். அவள் உடம்பு அவளுக்குத் தெரியாதா?

கிளம்பும்போது சந்தோஷமாகச் சுறுசுறுப்பாக உத்ஸாகமாகத்தான் கிளம்பினாள்.

சுமார் இரண்டு மைல்கள் போயிருப்பார்கள். அவளுக்கு என்னவோ திடீரென்று ஆயாசமாக இருந்தது. ஒரு காரில் ஏறித் தன் அறைக்குப் போய் அப்படியே படுக்கையில் தொப்பென்று விழுந்தால்...! ஆஹா...ஹா...ம்...இது என்ன கோழைத்தனம்! அவர் விரும்பும்படி யல்லவா நாம் நடந்து கொள்ளவேண்டும்! நாம் தோற்றால் ரேணு அல்லவா ஜயித்து விடுவாள்!

அவள் நடையை-பின்னழகை-அனுபவித்துக் கொண்டே நடந்தான் வேணு. அந்தப் பட்டுப் போன்ற உடலில் சுற்றி இருக்கும் அந்தப் பட்டு, அதில் வெய்யில்பட்டு உண்டாகும் பளபளப்பு, துவண்டு நெளிந்து ஆடும் பின்னல், ஆகிய எல்லாவற்றையும் ரஸிப்பதற்கு அவன் தவறவில்லை.

"வஸந்தா, உன்னைப் போல உற்சாகமும் உடல் வலிமையும் ஒவ்வொரு பாரதப் பெண்ணுக்கும் இருந்து விட்டால் நமது இந்தியா உலகத்தின் முன்னணியில் இருக்கும்!" என்றான் வேணு.

"நான் அவ்வளவு தூரம் புகழ்ச்சிக்கு ஏற்றவளில்லை" என்று வாய் இயங்கிற்று. ஆனால் பையிலுள்ள ஆஸ்ப்ரோவைக் கை நாடவே, அவர் பார்க்காமல் எப்படி மாத்திரையை விழுங்குவது என்று மனம் திருட்டு விழி விழித்தது.

எப்படியோ மூன்று மைலும் கடந்து மலையும் ஏறிவிட்டார்கள். அவளை அறியாமல் அவள் உடல் ஒரு வேப்பமர நிழலில் சுருண்டு உட்கார்ந்து கொண்டது. கால் ரணமாக வலித்தது. கண் இருண்டு வந்தது. முகம் ரத்தமாகச் சிவந்து கன்றி இருந்தது.

அரை மணி நேரம் அப்படியே நிழலில் விழுந்து கிடந்தார்கள். இன்னும் எத்தனை நாழிகை வேண்டுமானாலும் அவள் அங்கேயே உட்கார்ந்திருக்கத் தயார்தான். ஆனால் அவருடைய அந்தப் பார்வை என்னவோ செய்தது. இன்பமாக இருந்தாலும் 'திக்' என்றது. சட்டென்று எழுந்து நின்றாள்.

"எழுந்திருங்கள்! இங்கேயே உட்கார்ந்து கொண்டிருந்தால்.........!" என்றாள். ஆனால்





பிரின்ஸ்பால்:—பையன்களெல்லாம் 'அட்மிஷ'னுக்கு வந்து நின்றால் இனிமேல் இடமில்லை என்று வாயால் சொல்ல எனக்குக் கஷ்டமாயிருக்கிறது.

நண்பர்:—அப்படியானால் வந்த பையன்களையெல்லாம் சேர்த்துக் கொண்டு விடுவீர்களோ ?

பிரின்ஸ்பால்:—இல்லை, ஸார்! "இடம் இல்லை" என்று ஒரு போர்டு மாட்டி விடப்போகிறேன்!"

'நம் வாய் இதை எப்படி சொல்லிற்று!' என்று அவனுக்கே வியப்பாக இருந்தது.

திரும்பும் போது பாதையின் தூரத்தைக் குறைக்கும் சிந்தனையில் தானோ என்னவோ, இருவரும் அதிகமாகப் பேசவில்லை. வஸந்தாவுக்குக் கால் கெஞ்சிற்று. கண் எரிந்தது.

வஸந்தாவின் தள்ளாடிய நடையையும் கலைந்து காற்றில் பறந்து பளபளக்கும் கேசத்தையும், தோளிலிருந்து நழுவி விழும் தர்மாஸ் பிளாஸ்கையும் பார்த்து விட்டுத் தானோ என்னவோ கனவேகமாகப் புழுதியை வாரித் தூற்றிக் கொண்டு வந்த ஒரு பஸ் தனது வேகத்தை மட்டுப்படுத்திற்று.

"டவுனுக்குத் தானே! ஏறிக் கொள்ளுங்கள்!" என்றான் டிரைவர்.

வேணு வஸந்தாவின் பக்கம் பார்த்து, "வஸந்தா, பஸ்ஸிலே போய்விடலாமா ! நீயும் ரொம்பக் களைப்பாக இருக்கிறாயே !" என்றான்.

அவள் அன்புக்குப் பாத்திரனை வேணு மட்டும் பக்கத்தில் இல்லாமல் இருந்திருந்தால் அந்தப் பஸ்ஸுக்கும் டிரைவருக்கும் அநேக கோடி நமஸ்காரம் செய்து ஏறிக் கொண்டிருப்பாள். ஆனால் அன்று வெகு அலட்சியமாக டிரைவரைப் பார்த்துத் தலையசைத்து, "வேண்டாமப்பா ! நாங்கள் தேகாப்பியாசத்துக்காக நடந்து போகிறோம்" என்றாள். அவள் குரல் அவள் காதுக்கே நன்றாக இல்லை. ஜீவனில்லாமல் மெலிந்திருந்தது.

மீதிப் பாதையையும் மௌனமாக நடந்து முடித்தார்கள்.

காலேஜ் வாசலை அடைந்ததும் வஸந்தா வேணுவைப் பார்த்து ஒரு சிரிப்பை செலுத்திவிட்டாள். பிறகு, "இன்றைக்கு நல்ல பொழுது போக்கு. இன்னொரு நாளைக்கு இது போல வேறு எங்காவது போகலாம்" என்று துணிந்து ஒரு பொய்யைச் சொன்னாள்.

ஆனால் வேணு உடனே அதற்குப் பதில் சொல்லவில்லை. அவள் முகத்தையே இரண்டு நிமிஷம் பார்த்துக் கொண்டிருந்தான். பிறகு "நீ ரொம்பக் களைத்து விட்டாய், வஸந்தா!" என்றான்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. இன்றைக்கு வெய்யில் கொஞ்சம் கடுமை. அவ்வளவுதான்" என்று முகத்தில் முத்திட்டு நிற்கும் வியர்வையைத் துடைத்துக் கொண்டாள் அவள்.

* * *

மறுநாள்—வசந்தாவின் கால்கள் பெரிய ஆபரேஷன் செய்து கட்டுப் போட்டது போல ரத்தம் கட்டிக் கொண்டிருந்தது. காலை ஊன்றி வைக்க முடியவில்லை. வகுப்புக்கு லீவு போட்டு விட்டுப் படுக்கையிலேயே கிடந்தாள். மாலை நாலு மணி இருக்கும். போனில் யாரோ கூப்பிடுவதாகச் சொன்னார்கள்.

"வஸந்தாவா !...ம்...நேற்றைக்கு நமது பிரயாணத்தைப் பற்றி ரேணுகாவிடம் சொன்னேன். தானும் வராமல் போனோமே என்று வருந்துகிறாள். இன்று நீ வகுப்பிற்குக் கூட வரவில்லையாமே!"—இது வேணுவின் குரல்.

"ஒன்றுமில்லை. வெகுநேரம் தூங்கிவிட்டேன்" — சிரமப்பட்டுக் குரலில் அளவுக்கு மீறிய நிதானத்தை நிரப்பிப் பேசினாள்.

"அப்படியானால் இன்றைக்குச் சினிமாவுக்குப் போகலாம், வருகிறீர்களா !"

வெளியே கிளம்பவே அவளுக்குச் சிறிதும் விருப்பமில்லை.

அவரிடம் அதை எப்படிச் சொல்லுவது ! அவர் ஏதாவது ஒன்றுக்கொன்று நினைத்து விட்டால்...! ஆகவே, அவள் சம்மதத்தைத் தெரிவித்தாள். அடுத்த கணம் வஸந்தாவின் தெம்பிழந்த கை போனைக் கீழே வைத்தது.

எங்கெங்கோ விஷயமில்லாமல் அலைந்து அலுத்துப் போய் வஸந்தா திரும்பியபோது மணி எட்டு. கண் சுழன்றது. அவளுக்கு எல்லாமே இப்போது வெறுப்பாக இருந்தது.

நாலாவது நாள் இரவு ஏழுமணி இருக்கும். புத்தகத்தை முன்னால் பிரித்து வைத்துக் கொண்டு வஸந்தா சிந்தனையில் சிலையாகி இருந்தாள். கதவைத் தட்டும் சத்தம் கேட்டது.

ஒருவேளை அவராக......சீ ! இது என்ன பைத்தியக்கார எண்ணம் !......

கதவைத் திறந்தாள். ரேணுகா சிரித்த முகத்துடன் கவர்ச்சிகரமாக உடையுடுத்திக் கொண்டு மோகினிபோல நின்று கொண்டிருந்தாள். "உன்னுடைய இந்த லைப்ரரி புத்தகத்தைக் கொடுத்துவிட்டுப் போகலாம் என்று வந்தேன். பாதிதான் படித்தேன். ஆனால் நாளாகிவிட்டது. இப்பொழுதெல்லாம் எங்கே படிக்க முடிகிறது ! வேணு என்னை அரை நாழிகை உட்கார விட்டால்தானே !" என்றாள்.

"அப்படி என்ன, அரை நாழிகைகூட உட்காராமல் எந்தெந்த மலைகள் எல்லாம் ஏறினாய் !" — உற்சாக மிழந்த உள்ளத்திலிருந்துதான் வழிந்தது வார்த்தை.

ரேணுகா கல கல வென்று சிரித்தாள். "மலையிலும் ஏறவில்லை. நதியிலும் குதிக்கவில்லை. வரட்டுமா, வஸந்தி ! நாழியாச்சு. கீழே அவர் காத்திருக்கிறார் !" என்று சொல்லி

வழுக்கி விழும் காரச்சி ஸில்க் புடவையை அள்ளித் தோளில் போட்டுக்கொண்டு பரபரப்புடன் குதித்தோடினாள்.

அழகான பியூக் கார் பளபளவென்று நிலவில் சிரித்துக் கொண்டு நின்றிருந்தது. அதில் வேணு ரேணுகாவிற்காகக் கதவைத் திறந்து விட்டான். அவள் முன் ஸீட்டில் அவனுக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள். கலகலவென்ற சிரிப்பு. அதோடு காரின் சத்தமும் கலந்து கொண்டது. நிலவைக் கிழித்துக் கொண்டு விரைந்து செல்லும் ரஸ்தாவில் கார் வளர்ந்து சென்றது.

அதைக்கண்ட வஸந்தாவின் உடல் தேம்பிழந்து நின்றது. வேதனை, ஏக்கம், பொறாமை, வருத்தம்; ஆத்திரம், ஏமாற்றம் எல்லாம் கலந்து எரிமலையாகிக் குமுறிக் கொப்பளித்தன.

'என்ன முட்டாள்தனம்! ஒரு முரடனை ஹிருதயமில்லாதவனைப் போய்க் காதலித்தேனே' என்று கசந்து கொண்டாள். அவள் இதுவரை காதல் வேதனையை அனுபவித்ததே இல்லை. இதுதான் முதல் அனுபவம். மனங் கசந்தாலும் நினைவு கசக்கவில்லை.

அன்று ஞாயிற்றுக்கிழமை. விடுமுறையை அவள் மனது வெறுத்தது. வகுப்பு இருந்தாலாவது பாடத்தில் கவனம் செலுத்தலாம். தனிமையில் அறையில் அந்த நினைவுகளோடு போராடிக்கொண்டு எப்படி அன்றைய விடுமுறையைக் கழிப்பது!

டெலிபோன் ரீங்காரமிட்டது. "வஸந்தா, உனக்குத்தான் போன் வந்திருக்கிறது" என்றாள் ஒரு மாணவி. அவசரப்படாமல் நிதானமாகச் சென்றாள் வஸந்தா. உள்ளத்திலே உற்சாகமில்லை; ஆசைகள் இல்லை; கனவுகள் இல்லை.

"ஹல்லோ......யாரது!"

"ஹல்லோ......வஸந்தாதானே! நான்தான் வேணு பேசுகிறேன். ஒன்றுமில்லை......இன்று ஞாயிற்றுக்கிழமையாயிற்றே! எங்காவது காலாற நடந்துபோய்வரச் சௌகரியப்படுமா என்று கேட்கத்தான் கூப்பிட்டேன்."

அந்தப் பேச்சு அவளை வெறி கொள்ளச் செய்துவிட்டது. கால் துவண்டு நடுங்கிற்று. ஆனால் வெகு சிரமப்பட்டு வந்த ஆத்திரத்தை அடக்கிக்கொண்டு, "பறந்து செல்லும் காரில் சுகமாக உட்கார்ந்தபடி காற்று வாங்கப் போனாலும்கூட இன்றைக்கு நன்றாகத்தான் இருக்கும்" என்றாள்.

இதைச் சொல்லிவிட்டுப் பெருமிதத்துடன் தாளம் போடும் நெஞ்சத் துடிப்புக்குச் சமாதானம் சொல்லிக்கொண்டே, வரும் பதிலுக்குக் காத்திருந்தாள். கொஞ்ச நேரம் மௌனம். அந்தத் தாமதம் அவளுக்கு ஒரு மணிபோல இருந்தது.

"ம்...நன்றாகத்தான் இருக்கும். ஆனால் உனக்கு நடப்பதில் விருப்பம் என்றுதான் கேட்டேன்"—பரிதாபமாக ஒலித்தது ஆண் குரல்.

"இல்லை, மிஸ்டர் வேணு!.........எனக்கென்னவோ இன்றைக்கு ஒரே சோம்பலாக இருக்கிறது. காரில் உட்கார்ந்தபடி காற்று முகத்தில் வந்து மோத எங்காவது தனிமையான இடத்துக்குப் போய் நிம்மதியாக உட்கார்ந்திருந்து விட்டு வர வேண்டும் போலிருக்கிறது" என்றாள் வஸந்தா.



"எனக்கு இப்பொழுது உடனே ஐந்து ரூபாய் பணம் வேண்டும். ரூபாய் கிடைக்காவிட்டால், என் கத்தியை உபயோகிப்பதைத் தவிர வேறு வழியில்லை!"

"என்ன! தற்கொலை செய்து கொள்வாயோ?"

"இல்லை; அதை அடகு வைத்துப் பணம் வாங்குவேன்!"

"சரி"...என்று சொல்லி வேணு போனைக் கீழே வைத்தான்.

வஸந்தாவும் ரிசீவரை வைத்தாள். விரட்டப்பட்டிருந்த சிந்தனைகள் எல்லாம் வந்து குமிந்து குழப்ப ஆரம்பித்தன.

* * *

குலுக்கிவிட்டு நின்றது கார். வஸந்தா மௌனமாகக் கதவைத் திறந்துகொண்டு இறங்கினாள். கரகரத்துப்போன குரலைக் கனைத்துச் சரி செய்துகொண்டு வேணு! "வஸந்தா, இன்றைக்கு ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்!" என்று கேட்டான்.

"நான் ஒரு மாதிரியாகவும் இல்லை. உங்களோடு காலாற நடந்து வராததற்கு என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். என்னோடு காரில் வந்தால், சிரிக்கவும் பேசவும் உங்களுக்கு மறந்து விடுமென்பது எனக்கு இப்போதுதான் தெரிந்தது."

"காரில் போக வேண்டுமென்று நீதானே விரும்பினாய்!" அவன் குரலில் உறுதியும் கடுமையும் ஏறி இருந்தன.

வசந்தாவும் சிவந்து விட்டாள். "ஆமாம் அது என் தப்புத்தான். இனிமேல் என்னைக் கூப்பிடாதீர்கள். மலை ஏறும் போதுதான் உங்களுக்கு மனம் குளிர்ந்திருக்கும். ரேணுகா அருகில் இருக்கும் போதுதான் சிரிப்பும் குதூகலமும் வரும். நான் என்ன...!" ஆத்திரமும் அழுகையும் வார்த்தைகளைக் கொக்கி போட்டு உள்ளே இழுத்தன.

"வஸந்தா!" என்று கத்தி விட்டான் வேணு. அப்புறம் தன்னை ஒருவிதமாக அடக்கிக்கொண்டு, "வஸந்தா...நான் சொல்ல வந்த வார்த்தையைக் கேள். உன்னை மறந்துவிட என்னால் முடியவில்லை. முயன்று கூடப் பார்த்தேன். கடைசியில் தோல்விதான்! நான்

இனிமேல் சோம்பேறியாகவே இருக்கமாட்டேன். நடப்பதும் மலை ஏறுவதும் சிரமமாக இருந்தாலும் அதன் முடிவில் கிடைக்கும் உன் அன்புக்காக—உனக்காக அதை நான் செய்யத் தயார். வஸந்தா! இன்று நீ எனக்காகத் தான் காரில் வந்தாய் என்பதும் எனக்குத் தெரியும். அடுத்த தடவை கட்டாயம் நடந்தே எத்தனை தூரம் வேண்டுமானாலும் போகலாம்'' என்றான்.

குபீரென்று துள்ளிக் குதித்துத் தூரப் போய் நின்றுகொண்டாள் வஸந்தா.

''என்ன! என்ன சொன்னீர்கள்!'' தன்னை—தன் சூழ்நிலையை மறந்து கத்தினாள் வஸந்தா.

''ஆமாம், வஸந்தா! உண்மையை ஒப்புக்கொள்ளுகிறேன் எனக்கு நடை என்றாலே பிடிக்காது. ஓடுவதும் நடப்பதும் எனக்கு வேதனையாக இருக்கும்.''

வஸந்தாவிற்குக் குபீரென்று ஆகாயத்தில் பறப்பது போலிருந்தது.

''சொல்லுங்கள், மேலே சொல்லுங்கள்! உங்களுக்கு விருப்பமானது எது என்பதைச் சொல்லுங்கள்'' என்று நாக்குழற, கண்கள் மலர, கண்ணீர் உலரக் கேட்டாள்.

''நான் ஒரு முழுச் சோம்பேறி. ஹாய்யாகப் பொழுது போக்குவதில்தான் எனக்கு ரொம்ப ஆசை. கொளுத்தும் நிலவில் குஷியாய்க் கார் சவாரி செய்வதென்றால் எனக்கு ஒரே குஷி!''

வஸந்தாவினால் நிற்கக் கூட முடியவில்லை. அப்படியே ஹாஸ்டல் காம்பவுண்டு சுவரை ஒட்டி நின்ற வேப்ப மரத்தில் சாய்ந்து கொண்டாள். அதிக ஆனந்தம் ஏற்பட்டாலும் கூட இருதயம் இப்படியா கிடந்து தவிக்கும்!

''ரேணுகா!'' என்று ஏதோ கேட்க வாயெடுத்தாள். ஆனால் வேணு புரிந்து கொண்டவன் போல, ''உன் சந்தேகம் எனக்குத் தெரியும், வஸந்தா! ரேணுகாவை என்னவோ என் மனம் விரும்பவில்லை. அவள் உன்னைவிட அழகாக இருக்கலாம். ஆனால் உன்னைத்தான் எனக்குப் பிடித்திருக்கிறது. என்னை நடந்து மலை ஏறும்படி செய்தாலும் உன்னைத் தான் என் மனம் நாடுகிறது'' என்றான்.

வஸந்தாவினால் இந்த ஆனந்த அதிர்ச்சியைத் தாங்க முடியவில்லை. அவள் கேட்க நினைத்தது வேறு. ஆனால் வேணு சொன்னது வேறு. ஏன்! இதுவும் அவள் தெரிந்து கொள்ள வேண்டியதுதான். அவர் தன் உள்ளத்தைத் திறந்தல்லவா காட்டி விட்டார்! அப்பா! எத்தனை இன்பமாக, குதூகலமாக இருக்கிறது!

''ஆமாம்; நடப்பதிலும் நீந்துவதிலும் மலைமீது ஏறுவதிலும் எனக்கு விருப்பமென்று யார் சொன்னது!'' என்று கேட்டாள்.

''வேறு யார் சொல்லி இருப்பார்கள்! ரேணுதான் சொன்னாள். வஸந்தாவிற்கு விளையாட்டில் விருப்பமுள்ள பலசாலியானவர்களைத் தான் பிடிக்கும். அவளுக்கு நடப்பதில் ஆனந்தம். நீந்துவதில் கூடப் பரிசு பெற்றிருக்கிறாள் என்றெல்லாம் சொன்னாள். அதனால்தான் உன் அன்பையும் நன் மதிப்பையும் பெறுவதற்காக நான் உன் காரியங்களில் விருப்பமுள்ளவனாக நடித்தேன்.''

வஸந்தாவிற்கு இப்போதும் அழுகைதான் வந்தது. தொண்டையை அடைத்தது. ஆனால் இது இன்ப அழுகை; ஆனந்த அழுகை!

''இன்றைக்கு நீங்கள் உண்மையிலேயே காரில் போகத் தான் விரும்பினீர்களா!''—அந்த நிமிஷமே அவளுக்கு ரேணுகாவின் குறும்பு எல்லாம் விளங்கி விட்டது.

அவள் பட்டுக் கையை எடுத்துத் தன் கரத்தில் வைத்துக் கொண்டே வேணு சொன்னான்: ''ஆமாம், எனக்குக் காரில் சுகமாக உட்கார்ந்து கொண்டு காற்றில் மிதந்து செல்வதென்றால் பிடிக்கும். ஆனால் நீ அதை வெறுக்கிறாய் என்றும் எனக்குத் தெரியும்.''

வஸந்தாவின் ஆனந்தம் சிரிப்பாகப் பீறிட்டுக் கொண்டு சிதறி ஒலித்தது. தன் இரண்டு கைகளையும் அவன் தோள் மீது வைத்துக் கொண்டு கலகலவென்று குலுங்கக் குலுங்கக் கண்களில் நீர் பளபளக்கும்படி சிரித்தாள்.

''நான் ஒரு முழுச் சோம்பேறி. காலேஜில் கூட எனக்குத் தொட்டால் சுருங்கி என்று பெயர். நீங்கள் விளையாட்டிலும் தேகாப்பியாசங்கள் செய்வதிலும் எத்தனையோ பரிசுகளும் மெடலும் பெற்றிருப்பதாக ரேணுகா என்னிடம் சொன்னாள். தினம் காலையிலும் மாலையிலும் ஐந்து மைல் ஓடுவீர்கள் என்றும் சொன்னாள். உங்களை என் கவனத்திற்குத் திருப்பத்தான் நானும் விளையாட ஆரம்பித்தேன். மலை மீது கூட ஏறினேன். இதோ கால் கொப்பளித்துக் கன்றி இருப்பதைப் பாருங்கள்!''

வேணு வியப்பால் ஒரு விநாடி ஸ்தம்பித்துப் போனான். அடுத்த நிமிஷம் அவனால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

''இரண்டு முட்டாள்கள்! வடிகட்டின முட்டாள்கள்! ஒருவரை ஒருவர் பிடிக்கக் கண்ணாமூச்சி விளையாடி இருக்கிறோம். நமது கண்களை ரேணுகா கட்டி விட்டாள். வஸந்தா, நீயும் என்னைப் போலவேதானா!''—சிரிப்பை நிறுத்த முடியாமல் தவித்தான் வேணு.

அவர்களுடைய ஆனந்தத்திலும் இன்பத்திலும் பங்கு கொள்ள வருவதுபோல ஹாஸ்டல் கட்டிடத்தின் பின்னாலிருந்து எட்டிப் பார்த்தான் சந்திரன். தேய்ந்த உடல்தான். வஸந்தாவின் ஆசை கூடச் சற்று முன்னால் வரை தேய்ந்துதானே இருந்தது! ஒரே நிமிஷத்தில் அது வளர்ந்து பூரித்துப் போய்விடவில்லையா! அதே போல இன்னும் நாலைந்து நாளில் அவனும் வளர்ந்து விடுவான்!

இருவரும் ஒருவரையொருவர் வைத்த கண் வாங்காமல் எவ்வளவு நேரம் பார்த்துக் கொண்டிருந்தார்களோ, தெரியாது!

''வருகிறேன் வஸந்தா'' என்று வேணு சொன்ன பிறகுதான் வஸந்தாவுக்குச் சுய உணர்வு வந்தது.

வஸந்தாவிற்குப் பதில் சொல்வதற்குக் கூட வார்த்தைகள் அகப்படவில்லை. தலை நிமிர்ந்து விழிக் கோணத்தால் பேசினாள். இதழ் ஓரத்தில் ஒதுங்கி இருந்த அந்தச் சிரிப்பு அவள் தாக்கினையும் மீறித் துள்ளிக் குதித்து இதழ் முழுவதும் பரவி அதை மலர வைத்தது.

காரியத்தில் வெற்றி யடைந்தாலும், கனவு நனவாகி விட்டாலும் ஆனந்தம் அளவுக்கு மீறிப் போனாலும் தூக்கம் வராது போலிருக்கிறது. அன்றிரவு வஸந்தாவின் இமையோடு இமை சேரவில்லை!

# MARGO SOAP

*The Genuine*

NEEM OIL SOAP



# மார்கோ ஸோப்

வாசனை நீக்கப் பெற்ற வேப் பெண்ணெயிலிருந்து ஒரு விசேஷ முறைப்படி தயாரிக்கப் படுவது. அதன் அபரிமிதமான கிருமி நாச நுரை அழுக்கை யகற்றி, சருமத்தி னுள் புகுந்து நன்கு சுத்தம் செய்யும். சருமத்திற்குப் புஷ்டியும் மென்மை யும் தரும். அபூர்வ மணம். நுட்ப மான சருமத்திற்கும் ஏற்றது.

A CALCHEMICO PRODUCT

மதராஸ் ஆபீஸ்:

5/149, பிராட்வே, ஜி. டி., மதராஸ்



# 'கோலினாஸ்' புன்னகையில் குணமேன்மை ஒளிர்கிறது!

நுரை தான் இந்த வித்தியாசத்திற்குக் காரணம்!

அதிக சிக்கனமான துலக்கூட —ஏனெனில் அரை அங்குல அளவே போதுமானது!



உபயோகிப்பதே உத்தமம்

இந்தியாவில் தயாரிப்பாளர்கள்:
ஜியாபரே மானர்ஸ் & கோ. லிட்.
பம்பாய் 7

# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன் செய்தீர்களா?



"கடந்த சில ஆண்டுகளாக நான் மக்ளீன்ஸ் பற்பசையை உபயோகித்து வருகிறேன். அதிலிருந்து என் பற்களைப் பார்ப்பவர்கள் ஒவ்வொருவரும் ஆச்சரியப்படுகிறார்கள்."

ஆனந்தமும், ஆரோக்கியமும் கூடிய தங்கள் புன்னகையை அளிக்க மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசையை உபயோகியுங்கள். மக்ளீன்ஸ் உங்கள் ஈறுகளைப் பாதுகாத்து, சுவாசத்தை இனியதாக்கி பற்களைப் பளபளவென்று வெண்மையாக்கும். இவையாவும் ஏககாலத்தில் செய்வதை நீங்கள் அறிவீர்கள்.

மக்ளீன்ஸ் பெராக்ஸைட் பற்பசை பிரத்தியேகமான ஆராய்ச்சி முறையினால் தயாரிக்கப்பட்டது. அதன் சுத்தத்திற்கு உத்தரவாதம். அதனால்தான் உலகெங்கும் முன்ன கோடிக்கணக்கான மக்கள் தினமும் தங்கள் பற்களை சுத்தம் செய்ய இருவேளை மக்ளீன்ஸை உபயோகித்து வருகிறார்கள்.

## இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்




MTY-4 TAM.

வியாபார விவரங்களுக்கு: ஜெ.எல்.மாரிசன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட், மஹாலக்ஷ்மி கோவிலுக்கு எதிரில், வார்டன் ரோட், பம்பாய் 26.

Edited, Printed and Published by R. Krishnamurthy at "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

# நீரிழிவு

## ஏழு நாட்களில் குணமாகும்!

எவ்வளவு நாட்பட்டதாயினும், மிகக் கடுமையாக இருப்பினும் நவீன ரஸாயன முறைத் தயாரிப்பான **வீனஸ் சார்ம்** வியாதியை முற்றிலும் குணமாக்கி விடும். அடங்காத பசி, மரண தாகம், அடிக்கடி சிறுநீர் பிரிதல், சொரி சிரங்கு ஆகிய இவைகளே இவ் வியாதியின் முக்கிய அறிகுறிகள். இதை கவனிப்பின்றி விட்டு விட்டால் கட்டி, பிளவை, கண் கோளாறு முதலிய உபத்திரவங்களில் முடியும். **வீனஸ் சார்ம்** ஆயிரக்கணக்கானவர்களை மரிப்பினின்றும் பிழைக்க உதவியுள்ளது. உபயோகித்த மறு தினமே நீரிலுள்ள சர்க்கரைச் சத்தைக் குறைத்து இதமளிக்கும். இரண்டு மூன்று தினங்களில் பாதி குணமடைந்ததாக நீங்களே உணர்வீர்கள். ஆகார நிபந்தனை கிடையாது. இலவசமான விபரங்கள் அடங்கிய காட்லாகிற்கு எழுதவும்.

50 மாத்திரைகள் கொண்ட பாட்டில் ரூ. 6-12-0

(தபாற் செலவு இலவசம்)

**வீனஸ் ரிஸர்ச் லாபரடரி (K.M.)**

**தபால் பெட்டி நெ. 587, கல்கத்தா**

# ஆங்கிலக் கல்வி

தத்தம் இல்லத்திலிருந்தே, பிறர் உதவியின்றி ஒரே வருடத்திற்குள் நான்காம் படிவத்திற் கொப்பான ஆங்கில அறிவைப் பெறலாம். ஆங்கில எழுத்துகள் அறியாதவர்களும், இடையில் கல்வியை நிறுத்தியவர்களும் கற்கலாம். 4 அணா ஸ்டாம்புடன் விண்ணப்பிக்கவும்.

## கேம்பிரிட்ஜ் காலேஜ்

**(K) கைதமுக்கு, திருவனந்தபுரம்**

N. B:—S. S. L. C. தேறி கல்லூரி படிப்பிற்கு சௌகரியமற்றிருப்பவர்க்கு, பிரைவேட்டாகவே Intermediate தேறலாம் 6 அணா ஸ்டாம்புடன் விண்ணப்பிக்கவும்.

கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின் பெருமையையும் அவர் இந்தியாவுக்கு ஆற்றியிருக்கும் அருந்தொண்டையும்

# மகாத்மா காந்தி

**என்ற நூலில் அழகாக விளக்கியிருக்கிறார்**

விலை அணா எட்டு

(தபால் செலவு தனி)

சசிதேவி எழுதிய

# விஜயா

முதலிய கதைகள்

விலை ரூ. 2-8-0

(தபால் செலவு தனி)

கிடைக்குமிடம்

## கல்கி காரியாலயம்

கீழ்ப்பாக்கம் :: சென்னை

REGD. No M. 4392